# குருநாதரின் நூற்றாண்டு விழா





**மகா பெரியவாள் அவதரித்த புனித தினம் வைகாசி அனுஷம்;**
**மே 20, 1894**

முதல் குருவாக, மௌனகுருவாக விளங்கியவர் ''ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி.''

அடுத்தபடியாக பகவத் கீதையை உபதேசித்து ஜகத்குருவாக விளங்கியவர் ''ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா.''

கலியுகத்தில் பரமேஸ்வரன் அவதாரமாகக் காலடியில் அவதரித்தவர் ''ஆதி சங்கரர்''.

அவர் அமைத்த பீடமான காஞ்சி காமகோடி பீடத்தில் பல மஹான்கள், ஞானிகள் இருந்து வந்துள்ளார்கள்.

அவர்களுள் 68 வது ஆச்சார்யாளாக விளங்குகிறார் நமது குரு ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்.

பதின்மூன்று வயதில் சன்யாசம் ஏற்றுக் கொண்டு நூறாவது வயதிலும் பெரியவர்கள் பொது மக்களுக்கு ஆசி, வழங்கி வருவது நமது பாக்கியமாகும். தவ வாழ்க்கை நடத்தி வருவது தவிர, வேதங்கள், சாஸ்திரங்கள் தழைப்பதற்கு வேண்டிய ஸ்தாபனங்களின் அமைப்பு, பக்தி நெறி தழைக்க திருப்பாவை திருவெம்பாவை பாராயண இயக்கம், இராமேஸ்வரம் முதல் காசி வரை ஆதிசங்கரரின் நினைவு மண்டபங்கள், கோசம்ரக்ஷணம் போன்ற பல விதமான அறப்பணிகளை நடத்தி உள்ளார்கள். காசி யாத்திரையும் சென்று வந்துள்ளார்கள்.

பல வகையான உபதேசங்களை அருளியுள்ளார்கள். இவைகளையெல்லாம் தொகுத்து 'தெய்வத்தின் குரல்' என்று தமிழிலும் மற்றும் பிராந்திய மொழிகளிலும் ஆங்கிலத்திலும் கூட புத்தகங்கள் வெளியிடப்பட்டுள்ளன.

கிரீஸ்நாட்டு அரசு குடும்பம் முதல் விஞ்ஞானிகள், சரித்திர வல்லுனர்கள் வரை வெளிநாட்டவரும் நூற்றுக்கணக்கில் வந்து அவர்களைத் தரிசித்த மாத்திரத்திலேயே, மனத்தில் சாந்தியையும் ஆனந்தத்தையும் அடைந்துள்ளார்கள்.

பிற மதத்தினர் கூட பெரியவர்களைத் தரிசித்து அவர்களின் முக தேஜஸைக் கண்டு நாங்கள் இயேசுவின் அருளைக் கண்டோம், அல்லாவின் அருளைக் கண்டோம் என்று அனுபவித்து எழுதி உள்ளார்கள்.



அவரைத் தரிசிப்பவர்களுக்கு மட்டுமின்றி மனத்தால் மட்டுமே வழிபட முடிந்த பல லட்சக்கணக்கான குடும்பங்களுக்கும் நல்வழி காட்டியாக விளங்கி அருளாசிகளையும் பொழிந்து கொண்டிருக்கிறார்கள்.

நாட்டில் நெருக்கடி நேர்ந்த நேரத்தில் எல்லாம், பலவித ஆலோசனைகளைக் கூறுவதுடன் நமது தவ வலிமையையும் பயன்படுத்தி அருள்பாலிக்கின்றார்கள்.

குழந்தைகள் முதல் முதியோர் வரை, ஒவ்வொருவரும் நம்முடைய ''பெரியவாள்'' என்று பக்தியுடன் மட்டுமின்றி அன்புடனும் பாசத்துடனும் அவரை அழைத்து மன நிறைவு காண்கிறார்கள்.

நடமாடும் தெய்வமாகவும், பிரத்யக்ஷ ஞானியாகவும், சித்த புருஷராகவும், மஹா ஸ்வாமியாகவும், பரம ஆச்சார்ய ஸ்வாமிகளாகவும் விளங்கி உலகமெலாம் அமைதியாகவும், சாந்தமாகவும், இருக்க வேண்டும் என்பதற்காகவே தவயோகத்தில் ஆழ்ந்து கொண்டு இருக்கும் நமது குருநாதரின் நூற்றாண்டு விழாவில் நமது நமஸ்காரங்களைச் செய்து, நாம் ஒவ்வொருவரும் அவரது அருளாசிக்குப் பாத்திரமாகி இகபர லாபங்களைப் பெறுவோமாக.

*— காஞ்சி காமகோடி பீடாதிபதி*
*ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி*
*சங்கராச்சார்ய சுவாமிகள்*



# பாதம் பணியும் மகா பெரியவர்

குருர்நாம்நா மஹிம்நா ச சங்கரோ யோ விராஜதே
ததீயாங்க்ரி கலத்ரேணு கணாயாஸ்து மனோ மம

திருப்பெயரால் மகிமைகளால் சங்கரராய் ஒளிர்குருவே!
அருள் பொழிநின் அடிப்பொடிக்குள் ஆழ்ந்தெழும்என் தொழுமனனே

- ஆதிசங்கரர் பேரில் ஸ்ரீ பரமாச்சார்யாள் இயற்றியுள்ள சுலோகம்.

தமிழ் வடிவம் : இராச. பார்த்தசாரதி

# சந்திரசேகர கிருபாநிதே!

சமீப காலமாக எம்.எஸ். அவர்கள் பாடிவரும் கவி நய மிக்க இக் கீர்த்தனை பரமாச்சார்யாவின் நூற்றாண்டையொட்டி கே.ஆர். ஆத்மநாதனால் இயற்றப்பட்டு, கடையநல்லூர் வெங்கட்ராமனால் சங்கராபரண ராகத்தில், ஆதி தாளத்தில் இசையமைக்கப் பட்டுள்ளது.

### பல்லவி

சந்திரசேகர கிருபாநிதே சிவ
பஞ்சாக்ஷரஹர ஸ்வரூபனே!

(சந்திர)

### அனு பல்லவி

அகமதில் இருள்அற இகமதில் இடர்அற
பரமதில் பதம்பெற வரமருள் குருபர

(சந்திர)

### சரணம் - 1

முந்தை பிறவியின் பெரும் பயனோ
எந்தை தாய் செய்த தவப்பயனோ
உந்தன் திருவடி மலரினைத் துணையென
சிந்தை நிறைந்து நான் வந்தனை புரிந்திட

(சந்திர)

### சரணம் - 2

பாதம் நோக பலகாதம் நடந்துவந்து
போதம் நமக்கருள் வேதக்கருப்பொருளே
நாதம் நயமுற நாவில் நடமிட
கீதம் இசைத்திட நாளும் வரமருளே

(சந்திர)

### சரணம் - 3

ஓயா பேரலை பவகடல் கடந்திட
நாவாய் படகாய் நமக்கருள் புரிகின்றாய்
மூவா மருந்தாய் காக்கின்ற கன்றுக்கு
ஆவா அன்னையாய் அருள்மழை பொழிகின்றாய்

(சந்திர)








புதுடில்லிச் சாலையில் ஜாகிங் போகும் கல்லூரி மாணவி குஷ்பு தனக்கு மிக அருகே தமிழ்நாட்டு அரசியல்வாதி ஒருவர் படுகொலை செய்யப்படுவதைப் பார்த்து விட, அலறி அடித்துக் கொண்டு அடுத்த விமானத்தைப் பிடித்துச் சென்னைக்குப் பறந்து வந்து, போலீஸ் கமிஷனராக இருக்கும் அண்ணன் சரத்பாபுவிடம் பரபரப்போடு சொல்ல -

குற்றவாளியை நேருக்கு நேர் பார்த்த ஒரே சாட்சி என்று எடுத்துக் கொள்ளாமல், ரீல் விடுவதில் தனிச் சிறப்புப் பெற்றுள்ள தங்கை மாநில அளவிலிருந்து தேசிய அளவிற்கு அதில் உயர்ந்து விட்டதாகக் கருதி குஷ்புவின் சொற்களை உதாசீனப்படுத்தி விடும் சரத்பாபு -

பின்னர், குற்றவாளியைப் பிடிப்பதற்கு மேற்கொள்ளப்படும் எல்லா முயற்சிகளும் ஓர் அரசியல்வாதியின் தலையீட்டால் அடிபட்டுப் போய் விடுவதாக, விரக்தியின் விளிம்பில், ஜூஜியின் முன்னிலையில் வெடித்துச் சீறும் போது -

இவ்வளவு மிருதுவான முகத்தோற்றத்தை வைத்துக் கொண்டு இத்தனை ஆக்ரோஷத்தை எப்படி வெளிப்படுத்த முடிகிறது!

அதனைத் தொடர்ந்து விசேஷ அழைப்பின் பேரில் களத்தில் இறங்குகிறார் சரத்குமார் (இன்ஸ்பெக்டர் விஜய்). வில்லனின் கூட்டத்தில் ஒருவராக இடம்பெற்று, அவனது நம்பிக்கைக்குப் பாத்திரமாகி, படிப்படியாக அவனது கூட்டத்தில் உயர்ந்து, சாட்சியங்களோடு குற்றத்தை வெளிப்படுத்தும் அவருடைய முயற்சிக்கு இடப்படும் சங்கேதப் பெயர் 'ஆபரேஷன் வேடன்'. எனவே, படத்தின் பெயர் : 'வேடன்'.

ஒருபுறம், சரத்குமார் - குஷ்பு சந்திப்பில் தொடங்கி அவர்கள் காதலோடு கூடவே போட்டி போட்டு வளரும் வெல்வெட் கிளுகிளுப்பு. (உ.ம்: சிங்கப்பூர் பின்னணியில் இடம்பெறும் 'ஐ லவ் யூ' பாடல் காட்சி.)

மறுபுறம், வில்லன் சரண்ராஜின் நம்பிக்கையைப் பெறும் முயற்சியிலும் அதன் வளர்ச்சியிலும் இடம்பெறும் சரத்குமாரின் சாகசங்கள் ஏற்படுத்தும் சுவாரஸ்ய விறுவிறுப்பு.

இரண்டிலுமே ரசனையோடு கச்சிதமாகத் திளைப்பவர் சரத்குமார்.

துடிப்புக்கும் துள்ளலுக்கும் இன்னொரு பெயர் குஷ்பு.

வில்லத்தனத்தில் ஒரு வித்தியாசப் பரிமாணம் சரண்ராஜ்.

நகைச்சுவையோடு சில நிதர்சன உண்மைகளை அப்பட்டமாக உதிர்ப்பவர் ராதாரவி.

ஒற்றையடிப் பாதையை விட்டு விலகித் தனக்கென்று பாட்டையமைத்துக் கொள்ளத் தொடங்கியிருப்பவர் இசையமைப்பாளர் தேவா.

சஸ்பென்ஸ் கருதி சரத்குமாருக்குக் கிடைக்கும் தடயங்கள் அனைத்துமே தொடர்ந்து அழிக்கப்பட்டு விடும் நிலையில், கதை எப்படி முடியப் போகிறது என்கிற குழப்பம் ஏற்படுவது நமக்கு மட்டுமல்ல - கதாசிரியர் இயக்குனருக்கும்தான்!

பெரும் பகுதி - A1.

இடையில் அங்கங்கே மிருதுவாகத் தூவப்பட்டிருப்பது - 'A'.

முடிவுப் பகுதி - B.

- சி.ஆர்.கே.



# உங்கள் வாழ்க்கைக் கனவுகளை நனவாக்குகிறது ரெடிமணி

வி.சி.ஆர், வாஷிங் மெஷின், வெட் கிரைண்டர், மிக்ஸி, டூ-இன்-ஒன், கைக்கடிகாரம்... நீங்கள் விரும்பும் அத்தனை பொருட்களையும் வாங்கலாம். ஒரே கடையில். உங்கள் ஊரிலேயே ரெடிமணி ஷாப்பில்.

ஆம். நுகர்வோர் பொருட்கள் விற்பனையில் முன்னோடியாக திகழும் ரெடிமணி உங்களுக்கு அளிக்கிறது. பிரத்யேக பண உதவி.

நீங்கள் வாங்குவதற்கு வசதியாக எளிய தவணை முறைத்திட்டம், கோல்டன் சர்டிபிகேட் ஸ்கீம் மற்றும் சனிக்கிழமை சிறப்புச் சலுகை.

ஆகவே, அடுத்த முறை போதிய பணமில்லையே என்று வருந்தவேண்டாம். ரெடிமணி ஷாப்பிற்கு வந்து, நீங்கள் விரும்பியதை எடுத்துச்செல்லுங்கள்.



## ரெடிமணி ஷாப்

தலைமை அலுவலகம் :
119, டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை,
சென்னை 600 004.
தொலைபேசி: 847365, 843030


தெரியும், கண்ணாடி மாளிகைக்குள்ளே இருக்கிறதுனால உங்களாலே கல் வீசமுடியாதுன்னு...
நீதிபதி ராமசாமி


டாம்பீக (செலவு) மாளிகை
காங்கிரஸ் ஆட்சி
எம்.பிக்களுக்கு மனச்சாட்சி வோட்டு


பி.ஜே.பி. தலைவர் நீங்கறது சரி... ஆனா ஏதோ, தலைவர் தேர்தலாமே, அப்படீன்னா என்னாங்க?...
ஜெ.


அ.தி.மு.க. பொதுச்செயலாளர் நீங்கறது சரி... ஆனா ஏதோ, பொதுச் செயலாளர் தேர்தலாமே, அப்படீன்னா என்னாங்க?...
அத்வானி


மேடம்! எல்லா சுவிஸ் பாங்குகளும், 'எங்ககிட்டே அக்கௌண்ட் ஓபன் பண்ணுங்க'ன்னு கெஞ்சிக் கேட்டு, லெட்டர் போட்டிருக்காங்க...
அடேயப்பா! வீராணத் திட்டத்துக்கு, உலக நாடுகள்லேயிருந்து, அதுக்குள்ளே இவ்வளவு டெண்டருங்க வந்துருச்சா?...
ஜெ.

கல்கி

1993
மே 23
மலர் : 51
இதழ் : 43
ஸ்ரீமுக
வைகாசி 10

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## ராஜினாமா செய்தார் ராமசாமி;

## அசடு வழிகிறது காங்கிரஸ்!

ஜஸ்டிஸ் ராமசாமி மீதான கண்டனத் தீர்மானத்தை ஆதரித்தோ எதிர்த்தோ வோட்டுப் போடாமல் கையைக் கட்டிக் கொண்டு இருந்ததன் மூலம் கோடிக்கணக்கான வாக்காளர்களின் நம்பிக்கையைக் காங்கிரஸ் எம்.பிக்கள் இழந்து விட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சியின் மதிப்பு அதள பாதாளத்துக்குச் சரிந்து விட்டிருக்கிறது. இவர்களுக்கு வாக்களித்த ஒவ்வொரு இந்தியனும் இன்று வெட்கப்படுகிறான்.

ஜஸ்டிஸ் ராமசாமி மீது லஞ்சக் குற்றச்சாட்டு ஏதும் இல்லைதான். ஆனால் அதிகார துஷ்பிரயோகம் செய்து வரம்பு மீறி மக்கள் வரிப் பணத்தைத் தமது சொந்த ஆடம்பரத்துக்குச் செலவிட்டிருக்கிறார் என்ற ஊழல் குற்றச்சாட்டு சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபிக்கப்பட்டுள்ளது. வீட்டுக்கு அலங்காரப் பொருள்கள் வாங்குவதிலும் கார், ஃபோன் கட்டணங்கள் முதலியவற்றிலும் விதிமுறைகளை மீறி டம்பாச்சாரித்தனமாகச் செலவு செய்திருக்கிறார். இதற்கான சாட்சியங்களை ஆராய்ந்த மூன்று நீதிபதிகள் அடங்கிய குழு, அவர் முறைகேடாக நடந்து கொண்டிருப்பதாகத் தீர்ப்பு வழங்கியுள்ளது. தவிர, அவருக்கு வழக்குகள் விசாரணைக்கு ஒதுக்கப்படக் கூடாது என்றும் அப்படி அவர் வழக்கு விசாரிப்பாரெனில் அவர் கோர்ட்டில் ஆஜராவதில்லை என்றும் பல உச்சநீதிமன்ற வக்கீல்களே முடிவெடுத்தனர். இப்படிப்பட்ட ஒருவர், கண்டனத் தீர்மானத்திலிருந்து தப்ப காங்கிரஸ் எம்.பிக்கள் உதவியுள்ளனர். இந்தப் பாவத்துக்கு காந்தி சமாதியில் அக்டோபர் இரண்டில் மலர் வளையம் வைத்துப் பிராயச்சித்தம் தேடி விடுவார் பிரதமர்!

'ராமசாமி என்ன லஞ்சமா வாங்கினார்? ஏதோ தாம்தூம் என்று செலவு பண்ணினார், அவ்வளவுதானே? எந்த மந்திரிதான் செலவு பண்ணவில்லை?' என்று கேட்பது முட்டாள்தனம். அரசியல்வாதிகள் வரம்பு மீறி தவறு செய்தால் மக்களுக்கு நீதியும் நியாயமும் வழங்க வேண்டியவர்கள் நீதிபதிகள். அவர்களே விதிமுறைகளை அலட்சியம் செய்தால் யாரிடம் முறையிடுவது?

மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் சோம்நாத் சாட்டர்ஜி கொண்டு வந்த கண்டனத் தீர்மானத்துக்குக் காங்கிரஸ் பெருந்தன்மையுடன் ஆதரவு அளித்திருந்தால் எதிர்க்கட்சியினரின் நியாய உணர்வுகளுக்கு ஆளும் கட்சி மதிப்பளிப்பதாகக் கருதப்பட்டு காங்கிரஸின் கண்ணியம் உயர்ந்திருக்கும். ஆனால் முதலில் மனச்சாட்சிப்படி வோட்டளிக்குமாறு காங்கிரஸ் தலைமை தனது எம்.பி.க்களைக் கேட்டுக் கொண்டது. பிறகு மனச்சாட்சிப்படி வோட்டளித்தால் கூட கண்டனத் தீர்மானம் நிறைவேறி விடலாம் என்ற அச்சத்தில் ''வோட்டளிக்கவே வேண்டாம்'' என்று கட்சிக் கொறடா பிறப்பிக்கப்பட்டது. விளைவு, அத்தனை காங்கிரஸ் எம்.பிக்களும் அபிப்பிராயம் ஏது மற்ற அலிகளானார்கள். ராமசாமி கண்டனத் தீர்மானத்திலிருந்து தப்பினார். இவ்வாறு தப்ப வைத்து அவரது ராஜினாமாவைப் பெறுகிற ரகசிய ஒப்பந்தம் மூலம் காங்கிரஸ், சாக்கடையில் புரண்டு தன்னைத்தானே கேவலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

சோமநாத் சட்டர்ஜி எடுத்துக்காட்டியது போல ராமசாமிக்கு ஆதரவு வோட்டு ஒன்று கூட விழவில்லை. ஆனால் அவரைக் கண்டித்து 196 வோட்டுக்கள் போடப்பட்டுள்ளன. எனவே இதை ராமசாமி ஒரு வெற்றியாகக் கருத இடமேயில்லை. கண்டனத் தீர்மானத்துக்குத்தான் வெற்றி! ராமசாமியின் ராஜினாமா இதையே நிரூபிக்கிறது.

'ராமசாமி ஒரு தமிழர்; அதனால் அவரை ஆதரிக்க வேண்டும்' என்பது தவிர, ஜாதியையும் குறிப்பிட்டு, 'அதனால் ஆதரிக்க வேண்டும்' என்று இங்கே கருணாநிதி உள்பட சில தலைவர்கள் பேசியது அபத்தத்தின் உச்சம். ராமசாமியை அவரது டம்பாச்சாரித்தனத்துக்குக் கண்டிக்கக் கூடாது என்றால் ஜெயலலிதாவின் ஆடம்பரச் செலவுகளுக்காகக் கருணாநிதி அவரை எந்த அடிப்படையில் கண்டிக்க இயலும்?

'உற்பத்திக்கு உதவாத வீண் செலவுகளைக் குறைக்க வேண்டும்; இன்று நாட்டுக்குத் தேவை சிக்கனமும் அடக்கமுமே' - இதைத் திரும்பத் திரும்ப வலியுறுத்தும் காங்கிரஸ் தலைமை நமது கிராக்கிப்படியை வெட்டத் தயாராகிறது; ஆனால் ராமசாமியின் ஊழலுக்குத் துணை போகிறது என்றால் என்ன அர்த்தம்? ஆட்சியாளரின் டம்பாச்சாரித்தனத்துக்கு வைசென்ஸ் வழங்கி நியாயப்படுத்தியாகி விட்டது என்பதுதான்.



# ஆன்மிகத் தலைவரின் கலை உள்ளம்!

• ஓவியர் விஜு

## விஜு



"இவன் படமெல்லாம் போட்டுண்டு இருக்கான். பெரியவாள் அனுக்ரஹம் பண்ணணும்" என்று என்னைப் பற்றி, பரமாச்சாரியாளிடம் என் மாமா கேட்டுக் கொண்டதும், கையோடு கொண்டு போயிருந்த சில படங்களைப் பார்த்துவிட்டு, "இதுதான் உன்னோட சொத்து" என்று அனுக்ரஹம் செய்தருளினார் பெரியவாள். இது நிகழ்ந்தது என் சொந்த ஊரான வடாற்காடு மாவட்டம் திருப்பத்தூரில். அப்போது எனக்கு வயது 22.

அதன் பின், முழுநேர ஓவியராகி, சில காலம் சென்று கல்கி நிறுவனத்தில் சேர்ந்தேன். பெரியவாளுடன் பல சந்தர்ப்பங்களில் தொடர்பு கொள்ளவும் அவர் அன்புக்கும் வழி காட்டலுக்கும் பாத்திரமாகவும் வாய்ப்புக் கிடைத்தது. தரிசனத்துக்கு வருகிறவர் விஞ்ஞானியோ, கலைஞனோ, இலக்கியவாதியோ, யாரானாலும் அவரவருக்கு ஏற்ற மாதிரி எளிமையாக மட்டுமின்றி பயன் தரும் வகையிலும் பேசுவதில் பெரியவாளுக்கு நிகர் அவரேதான்.



ஒரு முறை கல்கி தீபாவளி மலருக்காக 'விசித்திர விக்கிரகங்கள்' என்ற தலைப்பின் கீழ் தெய்வச் சிலைகளைச் சித்திர மடலாக வரைய முடிவு செய்தோம். பெரியவாளிடம் இதைச் சொல்லி ஆசி பெறச் சென்ற போது,

"வி சி த் ர ம் னா என்ன....?" என்று கேட்டார்.

"பஞ்சமுக ஆஞ்சநேயர், சதுர்புஜ ராமர், இரு கரங்களுடன் மஹா விஷ்ணு..." என நாங்கள் யோசித்து, திட்டமிட்டிருந்ததைச் சொன்னேன்.

"பள்ளி கொண்ட சிவன்....?"

"பெரியவா சொன்னா தெரிஞ்சுக்கறோம்...."

"கருட்டுப்பள்ளின்னு திருப்பதி போற வழியில இருக்கு... அங்கே சயனத்துலே இருக்கார் சிவன்... முதல்ல ஜ்வரஹரேச்வரரைத் தரிசனம் பண்ணிட்டு அங்கே போங்கோ...."

எங்கள் குழுவிலிருந்த இருவருக்கு உடல் நலக் குறைவு என்பதை மறவாமல் ஜ்வர-ஹரேச்வரரின் ஆசி பெற முதலில் அனுப்பிய அவர் மெய்யன்பை வியந்தோம். அந்தலம் சென்று குணம் பெற்றோம். கருட்டுப்பள்ளி சென்று பார்த்தோம். ஆலகால விஷத்தை உண்ட சிவன், பார்வதி தேவியின் கலவரத்தைக் கண்டு, அவளை மேலும் சீண்டுவதற்காக மயக்கமுற்றதாக பாவித்து அவள் மடியில் தலை வைத்துப் படுத்திருக்கும் கோலம்! வியப்புடன் சுற்றி நின்று பார்க்கும் தேவர்கள். மங்களாம்பிகையின் முகத்தில் ததும்பும் கவலையை எண்ணி, கண் மூடிய நிலையிலும் குறும்பு நகை புரியும் காலகூடேச்வரர்...

இந்த விசித்திர விக்ரகம்தான் சித்திர மடலின் முதல் ஓவியமாக 1973 ஆம் ஆண்டு தீபாவளி மலரில் இடம்பெற்றது.

காஞ்சி அருகே தேனம்பாக்கத்தில் அமைந்துள்ளது தட்சிணாமூர்த்தி ஆலயம். ஒருநாள் மாலை நான் பரமாச்சாரியாளைத் தரிசிக்கப் போன போது, "தேனம்பாக்கம் தட்சிணாமூர்த்தி பார்த்திருக்கியோ?" என்றார். நான் 'இல்லை' என்றதும் "போய்ப் பார்! தட்சிணாமூர்த்தியோட சிரிப்பு ரொம்ப நன்னா இருக்கும். பகல்ல சரியாய்த் தெரியாது. இருட்டுலதான் அதைப் பார்க்கணும்" என்று கூறியதோடு மட்டுமின்றி, அன்று இரவே, தீவட்டி வெளிச்சத்தில் அந்த தட்சிணாமூர்த்தி சிரிப்பை நான் பார்க்கவும் ஏற்பாடு செய்து விட்டார். அதிசயமான அந்த தட்சிணாமூர்த்தியை ஓவியமாகவும் நான் தீட்டினேன். அது 'தெய்வத்தின் குரல்' பின் அட்டையில் இடம் பெற்றுள்ளது.

ஆஞ்சநேயர் படம் வரைந்து, அதனை ஆஸ்திக அன்பர்கள் பூஜித்துப் பயன் பெறும் வண்ணம் வெளியிடுவது என்று நான் தீர்மானித்து, அதன்படியே வண்ண ஓவியமும், தீட்டினேன். தீட்டிய ஓவியத்தை எடுத்துக் கொண்டு, கலவைக்குப் போனேன் பரமாச்சாரியாளின் அனுக்ரஹத்தை வேண்டி.

தரிசனம் முடிந்து, ஓவியத்தை அவரிடம் காட்டினேன். கைகளிரண்டையும், கூப்பியபடி ஓவியத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் ஓவியத்தை என்னிடம் திருப்பிக் கொடுத்த உடன், அருகில் நின்று கொண்டிருந்த பெரியவாளைத் தரிசிக்க வந்திருந்த அன்பர்கள் பலரும் அந்தப் படத்தை வாங்கிப் பார்த்து, முடிக்கிறவரை, தன் கைகளைக் கூப்பியபடியே அமர்ந்திருந்தார். எனக்கு அருளியதுடன் அந்தப் படத்தைத் தரிசிப்பவர் அனைவருக்காகவும் சேர்த்துப் பிரார்த்தித்து அருளியது போலிருந்தது அந்தக் காட்சி. நான் நெகிழ்ந்து போனேன்.

சந்திப்பு : மௌலி

**சுஜாதா**

**போ**யிங் விமானத்தின் ஜன்னல் வழியாக டாக்டர் சிவசங்கர் பார்த்தார். சென்னையின் தென்னை மரங்கள் மெல்ல அணுகிக் கொண்டிருக்க, கட்டடங்கள் கான்க்ரீட் கொம்புகள் போல முளைத்தன. நுரை மீசை வைத்திருந்த கடலலைகளின் அருகே வெண்மணல் பாக்கி இருந்தது.

''சரியா இருபது வருஷம் ஆச்சு இந்த மெட்ராஸை விட்டு'' என்றார்.

''நிறைய மாறுதல் இருக்கும்'' என்றாள் பாகீரதி.

''கடல் மட்டும்தான் மாறலை!''

பாகீரதி தன் கைப் பெட்டியைத் திறந்து, சின்னச் சின்ன பல வர்ணக் குப்பிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துத் திறந்து கவிழ்த்து கிடைத்த ரோஜா நிறக் குழம்பை எடுத்து முகத்தில் தேய்த்துக் கொண்டு தன் வயசைப் பத்து நிமிஷம் குறைத்துக் கொண்டாள். விமானத்தில் குப்பென்று வாசனை சூழ்ந்தது.

''சங்கராச்சாரியாரை பார்க்கப் போறதுக்கு மேக்அப்பா?''

''மேக் அப் இல்லை வெயில் தாங்காது என் ஸ்கின்.''

''மே ஐ ஹேவ் யுர் அட்டென்ஷன் ப்ளீஸ்...!'' என்று மண்டை மேல் இருந்த ஸ்பீக்கர் கமறியது. அதற்கப்புறம் புரியவில்லை.

''உலகத்திலேயே மோசமான ஏர் லைன்னு வருஷா வருஷம் இண்டியன் ஏர் லைன்ஸுக்குத்தான் பரிசு தரணும்.''

பாகீரதியின் ஆழ்ந்த மௌனத்தைத் தொடர்ந்து, ''உலகத்திலேயே மோசமானதொரு ஏர்போர்ட் பாம்பே'' என்றார்.

பாகீ அவரைக் கடைக் கண்ணால் பார்த்து, ''உங்க இண்டியா தூஷணையை ஆரம்பிச்சுட்டீங்களா?''

''உ ண் மை யை த் தா னே சொல்றேன். இந்த நாடு உருப்படுமா சொல்லு. ஏர்போர்ட்டில குடிக்க ஒரு வாய் தண்ணி கிடையாது. உக்கார ஒரு நாற்காலி கிடையாது. அமெரிக்காவில கன்ஃபார்ம் பண்ண டிக்கெட் இங்கே மெஸேஜ் வரலைங்கறான். ப்ளேன் மூணு மணி நேரம் லேட்டு. எதுக்காக இந்த நாட்டுக்கு ஏரோப்ளேன்?''

பாகீரதி பேசாமல் இருந்தாள். இந்த மாதிரி கேள்விகளுக்கெல்லாம் பதில் சொன்னால் இன்னும் பெரிசாக வாக்கு வாதம் வளரும்.

''காஞ்சீபுரத்தில் ஓட்டல் ஏதாவது உண்டா இல்லை வயக் காட்டுப் பக்கம் ஒதுங்கலாமா?''

பேசவில்லை.

''அலுமினிய சொம்பு எடுத்துகிட்டுப் போடா?''



பேசவில்லை. விமானம் தரை தொட்டு ஒரு தடவை குதித்தது. ''என்ன மோசமான லாண்டிங்!'' விமானம் ஊர்ந்தது.

''உனக்கு வேணும்னா அவரைத் தரிசனம் பண்ணிக்கோ. எதுக்காக என்னை இழுக்கறே!''

''நீங்களும் பார்க்கணும்.''

''எதுக்கு நான்? எனக்குத்தான் இதில் எல்லாம் நம்பிக்கை கிடையாதே. நான் ஒரு பிஸிக்ஸ் ஆசாமி - அக்னாஸ்டிக்!''

பாகீ இந்தப் பேச்சைத் தொடர விருப்பமின்றி, ''இன்னிக்கு என்ன கிழமை?'' என்றாள்.

''இந்தியாவுக்கு வந்து இண்டியன் ஏர் லைன்ஸ் விமானத்துக்குக் காத்திருந்து கிழமையே மறந்து போச்சு...

''எத்தனை நேரம்? இவங்களுக்கெல்லாம் எதுக்கு ஏரோ ப்ரிட்ஜ்?'' பிரயாணிகள் இறங்க அவசரப்பட்டு முன் வாசலில் நெருக்கினார்கள்.

''மூணு மணி நேரம் உக்காந்திருந்தாங்க



# தேடல்

பிருக்கிறார்!

''கென்னடியில் வந்து இறங்கறேன், டெலி போன் செய்யக் காசு இல்லை. 'கலெக்ட் கால்'னா என்னன்னே தெரியாது. அப்ப அங்க ஒரு...''

- அவர் வாழ்க்கையில் முன்னேறிய கதையை 27-வது தடவை கேட்கத் தயாரானாள். சீட்டிலேயே உட்கார்ந்திருந்து, எல்லோரும் இறங்கியதுமே அவர்கள் வெளியே வந்து பாலம் கடக்கும் போது, உஷ்ணம் அவர்களைத் தாக்கி, ஐம்பது அடி அவர்கள் உடன் வந்து 'ஏஸி'க்குக் கொண்டு விட்டது. 'எஸ்கலேட்டர் அவுட் ஆஃப் ஆர்டர்' என்று போர்டைப் பார்த்துச் சிவசங்கரன் நக்கலாகச் சிரித்தார்.

''இருக்கிற ஏழை ஜனங்களுக்கு உணவும் உடையும் கொடுத்து, பாப்புலேஷனை கண்ட்ரோல் பண்ணா போதும். மத்த எதுவும் வேண்டாம் இண்டியாவுக்கு. லாட்டிலைட் எதுக்கு? டீவி எதுக்கு? எதுக்காக மிஸைல் ப்ரொகிராம்?'' என்று மூன்று வரியில் இந்தியாவுக்கு விமோசனம் சொன்னார். பாகீ மௌனமாகவே வந்தாள். அமெரிக்காவில் இருந்தால் விவாதித்திருப்பாள். 'நாமெல்லாம் இதைச் சொல்வது ரொம்பச் சுலபம், நடைமுறைதான் கஷ்டம்' என்று. இங்கே பாகீரதி அவருடன் எந்த விதத்திலும் வாதாட விரும்பவில்லை. காஞ்சி போய்ச் சேரும் வரையாவது!

கீழே ஹாலில் இறங்கினதும் கை வண்டி எடுத்துக் கொண்டார். அதன் சக்கரங்கள் சண்டி பண்ண, ''தத்! ஒரு கை வண்டி சரியா பண்றாங்களா பாரு இண்டியால...''

கன்வேயரில் சுயம்வர ராஜகுமாரி போல் ஊர்ந்து வந்து கொண்டிருந்த அவர்கள் பெட்டியை, ஒரு சிப்பந்தி அதன் பாகேஜ் சீட்டைத் தப்பாகப் படித்து, எடுத்து வைத்துக் கொள்ள, சிவசங்கரன் ''எக்ஸ்கியூஸ்மி, எக்ஸ்கியூஸ் மீ'' என்று ஓடிப் போய் அவன் கையைப் பிடித்துத் தடுக்க, அந்தச்

- மூணு நிமிஷம் கதவு திறக்க பொறுமை இல்லை... இண்டியன்ஸ்!''

'நீங்க இண்டியன் இல்லையா?' என்று கேட்க விருப்பமின்றி, பாகீ பேச்சை மாற்றினாள்.

''நீங்க முதல்ல அமெரிக்கா புறப்படறப்ப எத்தனை டாலர் வெச்சிருந்தீங்க?''

''ரெண்டு டாலர்! ஜஸ்ட் டூ டாலர்ஸ்!'' - அது அவருடைய செல்ல 'டாபிக்'. எத்தனை தடவை சொல்லி

கிப்பந்தி, ''பொட்டி உன்னுதுன்னா சொல்லு - மேல கை போடாதே! நீ கை வச்சா நான் வைக்க எத்தினி நேரமாகும்? நீ சிமோன்னா உங்க ஊரோட வச்சுக்க - இந்த பேட்டைல நான் சிமோன்'' என்றான்.

''வாட் வாட்?''

அவர் திரும்பிய போது முகம் சிவந்திருந்தது. கைகள் உதற ஸார்பிட்ரேட் மாத்திரை எடுத்து அடக்கிக் கொண்டார். ''ஃபூல்ஸ்! ஃபிலிஸ்டைன்ஸ்...'' பாகீரதியின் மேல் பாய்ந்தார். ''எல்லாம் உன்னாலதான். எதுக்காக என்னை இந்த மாதிரி அவமானப்படுத்தறே? நான்தான் இண்டியா வர மாட்டேன்; ப்ரின்ஸ்டன்லயே இருக்கேன்; எனக்குப் பிடிக்காது இதெல்லாம்னு சொன்னேனில்லையா? எதுக்காக என்னை டார்ச்சர் பண்றே? நான் எதுக்காக மெட்ராஸ் ஏர்போர்ட்டில ஒரு பொறுக்கிகிட்டே கெட்ட வார்த்தை கேக்கணும்?''

''டேய் யார்றா பொறுக்கி! ஒரு உதை

''நம்ம தலைவருக்குக் காந்தி எப்படி இருப்பார்னே தெரியாம இருந்ததாம்!''

''அப்புறம் எப்படித் தெரிஞ்சுக்கிட்டாரு?''

''லஞ்சப் பணமா ரெண்டு ஐந்நூறு ரூபாய் நோட்டுக் கட்டுக்கள் வந்ததுக்கப்புறம்தான்!''

- அதினை நூகப்



விட்டன்னா அரை டிராயர்லாம் ரத்தம் ஆயிரும்!''

''நீங்க வாங்க; அவனோட என்ன?''

பாகீரதி அவசரமாக வெளியே வந்தாள். இந்த உச்ச சமயங்களில் பேசவே கூடாது.

வராந்தாவுக்கு வந்தார்கள். வாசலில் கார் காத்திருக்கும் என்று சொன்னார்கள். யார் என்று தெரியவில்லை. அவரவர் அவரவர் கார்களில் ஆரோகணித்துக் கதவு சாத்திக் கொண்டு புறப்பட்டுச் செல்ல, சற்று நேரத்தில் வராந்தா காலியாகி விட்டது.

''ஆட்டோ போலாங்களா? செவண்டி ருப்பீஸ் கொடுத்துருங்க. எங்க மைலாப்பூர் தானே!''

''நான் எங்க போவா உனக்கென்ன?''

''அவனோட பேச வேண்டாம்.''

''கம்மானாங்காட்டியும் கேட்டேன் கோவிச்சுக்கறியேமா!''

அப்போது ஒரு டிரைவர் வந்து, ''நீங்க டாக்டர் சிவராமனா?''

''டாக்டர் சிவசங்கர்.''

''காஞ்சி பார்ட்டி நீங்கதானே? ப்ரதிபா ட்ராவல்ஸ்ல வண்டி கேட்டிருந்தீங்களே!''

''ஆமாம்.''

''இருங்க வண்டி வந்திருக்குது.''

''நான் சிவராமன் இல்லைப்பா.''

''சரி சிவசங்கர். வாங்க! உங்களுக்குத் தான் வண்டி.''

பாகீரதிக்கு அந்த டாக்ஸி டிரைவரைப் பிடித்திருந்தது. பெட்டியை எடுத்து வைத்துக் கதவை மரியாதையாகத் திறந்து, மூடி - ஓடிப் போய் ஸீட்டில் அமர்ந்தான்.

''ஒரு பேரை ஒழுங்காக் கொடுக்கத் தெரியலை; என்ன ட்ராவல் ஏஜென்டுப்பா!''

''அது சில சமயங்கள்ள தப்பாயிருதுங்க டெலக்ஸ்ல...''

''எது சரியா இருக்கு உங்க நாட்டில?''

''டிரைவர் உங்க பேரு என்ன?''

''பால்ராஜிங்கம்மா. ஏஸி போட்டுரலாங்களா...? காஸெட் போட்டுரலாங்களா?'' காஸெட்டைச் செருகினான்.

'கண்ணும் கண்ணும் கொள்ளையடித்தால் காதல் என்பது பேர்.'

''எனக்குக் காதல் வேண்டாம்பா!''

கார் கிளம்பி நெடுஞ்சாலையில் சேர்ந்து கொண்டது.

''பக்தி பாட்டு போடட்டுங்களா?''

''எதுவும் வேண்டாம்பா, ஆளை விடு!''

பூந்தமல்லி பக்கம் திரும்பியது. ''பால்ராஜ், மெள்ள போங்க, அவசரமே இல்லை.''

''நீங்க பெரியவரைத் தரிசனம் பண்ண வேண்டாமா இன்னைக்கு? போயிரலாங்க ரெண்டு அவர்ல.''

''நாளைக்கு மெள்ள தரிசனம் பண்ணிக்கறம்பா எனக்கு அவசரம் இல்லை. நான் பார்க்கலைன்னா கூட பரவால்லை. இந்த அம்மாதான்... இதுக்காகவே அமெரிக்காலருந்து வந்திருக்கம்!''

''அப்படீங்களா? சந்தோசங்க. மனித தெய்வம் ஸார் பெரியவரு. இதுவரைக்கும் எம்பத்தொம்பது முறை தரிசனம் பண்ணிட்டேங்க! இன்னும் பன்னண்டு பண்ணா நூறாயிரும் - அவருக்கு நூறு வயசு ஆனாப் பல...''

''பால்ராஜ் நீங்க கிறிஸ்டியன்தானே?''

''ஆமாங்க அதனால என்ன ஸார்?''

''ஃபன்னி!'' என்றார் சிவசங்கர்.

''எங்க வீட்டில் அவருதாங்க தெய்வம். அவரு என்ன சொல்றாரு? நீ சர்ச்சுக்குப் போ - மசூதிக்குப் போ - கோயிலுக்குப் போ - கடைசில - எல்லா தெய்வங்களும் ஒன்னு தானே...''

''விபூதி வரவழைப்பாரா?''

''அது சாயிபாபாங்க. இவர் உங்களைப் பார்த்தாலே போதும்ங்க - நினைச்ச காரியம் நடக்கும்.''

''உனக்கு நடந்ததா!''

''பின்னே? நம்ம புள்ள ரோஸ்மரிக்குத் தபால் ஆபீஸ் உத்யோகம் கிடைக்கணும்னு ஒரு முறை கேட்டேங்க. அடுத்த ட்ரிப்ல ஆர்டர் வந்துருச்சு!''

''அப்படியா டெலிபோன்லயும் இருக்காரா இவர்!'' - என்றார். அந்தக் கேலியை பால்ராஜ் கவனிக்கவில்லை.

''பெரியவர்தாங்க தெய்வம். தூரக்க இருந்து பார்த்து மனசில கேட்டா காரியம் நடக்குது. உங்களுக்கு என்ன வேணுங்க!''

''காஞ்சிபுரத்தில நல்ல ஓட்டல்பா!''

''அம்மா உங்களுக்கு?''

''நிம்மதி'' என்றாள்.

''அய்யாதான் கேலியாப் பேசறாரு!''

''பால்ராஜ், பாருங்க. எனக்கு இதில எல்லாம் நம்பிக்கை இல்லை. நான் செய்யற ஆராய்ச்சில கடவுள் தேவைப்படற தில்லை.''

''எனக்குத் தேவைப்படுதுங்க.''

''ஷட் அவுட்!'' என்று கத்தினார்.

வண்டி ஒரு லாரியை நூலிழையில் தவிர்த்து, தார் சாலையை விட்டு இறங்கி பாம்பு போல் நெளிந்து மரத்தருகே நின்றது.

அவர் உடல் நடுங்கி நெற்றி வியர்வை படர்ந்திருக்க, பால்ராஜ் இறங்கி டயரை உதைத்து, ''பஞ்சர்ங்க! பதினஞ்சு நிமிஷத்தில ஸ்டெப்னி போட்டுரலாங்க. இளனி சாப்பிடுங்க.''

சிவசங்கர் சிகரெட் பற்றவைத்தார். மரத்தடியில் கயிற்றில் குலைகுலையாக இளநீர் தொங்கியது.

''இளனி சீவலாங்களா?''

''வேண்டாம்பா.''

''சீவிட்டேங்களே...''

பாகீரதி பதற்றத்துடன் மற்றொரு வாக்குவாதத்தை எதிர்பார்த்தாள். ''சரி குடு'' என்றார். நல்லவேளை.

இளநீரை உறிஞ்சுகையில், ''இண்டியால இது ஒண்ணுதான் உருப்படியா இருக்கு!''

பால்ராஜ் டயர் ஸ்பானரை டிக்கி இடைவெளியில் செருகி விட்டு, ''போவலாங்க'' என்றார்.

''இளனி சாப்பிடுங்க பால்ராஜ்'' என்றாள் பாகீ.

''வேண்டாம்மா. பெரியவரைப் பார்க்கிற வரைக்கும் பச்சை தண்ணி பல்லுல படக் கூடாது.''

''மயிரிழைல தப்பினோம்.''

''எல்லாம் பெரியவர் ஆசிங்க!''

''அப்படியா?'' மறுபடி கேலிக்குரல்.

காஞ்சிபுரத்தை அணுகும்போது மூன்றாகி விட்டது. ஏரியில் வாத்துகள் நீந்த, அதை அணைத்துச் சென்ற பாதையில் பனை மர ஸோல்ஜர்கள் காவல் நின்றன. கோபுரங்கள் வெண்மையாக, புதுசாகத் தெரிந்தன. நகரமே நூறாவது ஆண்டைக் கொண்டாட அலங்கரித்துக் கொண்டிருந்தது. குறுக்கும் நெடுக்கும் தட்டியும் மூங்கிலும் கதந்திர மாடுகளும் ஓடும் நாய்களும் லாட்டரி டிக்கெட் நிறைந்த சைக்கிள்களும்.... பாகீரதிக்கு உற்சாகம் பொங்கியது. பெரிசாக பந்தல் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

''இங்கதான் விளா நடக்கப் போவுதுங்க.''

''யாராவது இந்த ஊரைப் பார்த்தா பழைய பல்லவா காலத்துத் தலைநகர்னு சொல்வாங்களா. வாட்டிக்கனைப் பார்த்தியே எப்படி இருந்தது? ஆயிரம் ஆண்டு பழசுன்னா அமெரிக்கால என்னமா 'ப்ரிஸர்வ்' பண்ணுவா!''

''நமக்கு அதெல்லாம் முக்கியமில்லைங்க.''

''நான் உங்கிட்ட பேசலை பால்ராஜ்.''

''நேராப் போய்ப் பெரியவரை முதல்ல தரிசனம் பண்ணிரலாங்க. அப்புறம் போயி மத்த சாமிங்களைப் பார்த்துரலாம்.''

சிவசங்கர் தீர்மானமாக மறுத்தார்.




''முதல்ல ஓட்டல் போய் 'செக் இன்' பண்ணிட்டு அப்புறம்தான் மத்ததெல்லாம்.''

''இல்லைங்க அரைமணிதான் அவரைப் பார்க்க சமயம். அதுக்குத்தாங்க விரட்டிக்கிட்டே வந்தேன்.''

''நாளைக்குப் பாத்துக்கலாம். முதல்ல ஓட்டல். எனக்குப் பசிக்கிறது.''

ஆர்ச் வளைவுகளில் மூன்று பெரியவர்களும் ஆசீர்வதிக்க நரசிம்மராவ் எழுதிக் கொண்டிருந்தார்கள். 'காமாந்தகார கன்னி' என்ற சினிமாகவரொட்டியை உரக்கப் படித்தார்.

ஒரே ஒரு த்ரீ ஸ்டார் ஓட்டல்தான் இருந்தது. அதிலும் ரூம் போட்டு உள்ளே சென்று படுக்கையில் உட்கார்ந்ததும் குறை சொன்னார். ''பாத்ரூமில் கரப்பான் பூச்சி, சுவர்களில் ரத்தக் கறை, டவல் அழுக்கு, மருந்து நாற்றம்... அமெரிக்கால ஒரு மினிமம் கம்ஃபர்ட்டாவது...''

பாகீரதி கடைசியாகப் பொறுக்க முடியாமல், ''ரெண்டு நாளைக்கு அமெரிக்

காவை விட்டு இந்தியாவுக்கு வாங்களேன். நாம வந்தது பரமாச்சாரியாளைத் தரிசனம் பண்ண. ஓட்டல் ரூட்டைப் பூச்சியை எண்ண இல்லை.''

''நாம வந்ததுன்னு சொல்லாதே. நீ வந்தது! எனக்கு இதில இஷ்டமில்லை நம்பிக்கை இல்லை. அவரைப் பார்க்காட்டி கூட எனக்குப் பரவாயில்லை. தலைவலி எனக்கு!''

அதற்குள் பால்ராஜ் வந்து, ''அம்மா, அம்பாள் பூசை செய்யறாரு சின்னவரு. வாங்க போய் தரிசனம் பண்ணிடுங்க.''

''வரேன் பால்ராஜ்... கிளம்புங்க.''

''நான் வரலை நீ போ. நான் ரூம்ல இருக்கேன்.''

''நீங்க வராம தனியாப் போக மாட்டேன்.''

''அதான் பால் இருக்கானே?''

''அய்யா நான் உள்ளே வர மாட்டங்க! வெளியே பெரியவரை ஒருமுறை தரிசனம் செய்தா போதும்...''

''சே! உன்னோட வேதனை பாகீ!''

''ப்ளீஸ்! ஒரு நாளைக்கு ஒரே ஒரு நாளைக்கு உங்க பிஸிக்ஸ் பேசறதை மறக்கக் கூடாதா, பிடிவாதத்தை விட்டுக் கொடுக்கக் கூடாதா? இந்தப் பிடிவாதம் பிடிச்சுத்தானே பிள்ளையைப் பறிகொடுத்தோம்.''

அவர் சட்டென்று மௌனமாகத் தீய்க்கும் கண்களால் பாகீரதியைப் பார்த்து, ''நான்தான் காரணமா! நான் மட்டும்தான் காரணமா?'' என்றார்.

''மறுபடி ஆரம்பிக்க வேண்டாம்.''

''நான்தான் காரணமா சொல்லு?''

''சரி நானும்தான் காரணம்.''

பால்ராஜ் தர்மசங்கடத்தை உணர்ந்து, ''நான் ஓட்டல் வாசல்ல வண்டி கொண்டு வரேங்க!''

சிவசங்கர் ''ஆல்ரைட்! வரேன். ஆனா என்னால சட்டையெல்லாம் கழட்ட முடியாது. அப்பப்ப ஸ்மோக் பண்ணுவேன். நான் நாஸ்திகன். மதமும் ஒரு போதைப் பொருள். ஒரு ஏமாற்று வேலைன்னு நம்பறவன்.''

''கம்மா வாங்களேன் துணைக்கு!'' அவர் அரை டிராயரையும் யுனிவர்ஸிட்டி பனியனையும் மாட்டிக் கொண்டு தலையில் பேஸ்பால் குல்லா போட்டுக் கொண்டு ''லெட்ஸ் மூவ்!'' என்றார். பாகீரதிக்கு அழுகை வந்தது. ஏன் இத்தனை பிடிவாதம் பிடிக்கிறார்! ஏதோ நிகழப் போகிறது என்று வயிற்றில் பயம் முலாம் பூசியது.

**ம**டத்துக்குள் நூற்றுக்கணக்கானவர்கள் உட்கார்ந்திருக்க, மேடை மேல் பூஜை நடந்து கொண்டிருந்தது. ''ஹு இஸ் திஸ் பாய்?''

''புதுப் பெரியவா.''

''வாட் நான்சென்ஸ், இந்தப் பையன் கால்ல விழணுமா?''

''நீங்க விழ வேண்டாம்.''

> ''நேற்று உனக்கும் உன் நண்பனுக்கும் ஓட்டலில் சண்டையாமே? யார் 'பில்' கொடுக்கிறதுன்னா?''
>
> ''இல்லை; யார் மாட்டறதுன்னு தான்!''
>
> – எஸ். ப்ரியா

''இவர் நம்பர் த்ரியா? வேர் இஸ் நம்பர் டூ?''

''பேசாம இருங்களேன் ப்ளீஸ்.''

ஆயாசம் தரும் அளவுக்குக் காத்திருந்த பின் ஆரத்தி எடுத்தார்கள். அங்கிருந்து கவரோரமாக நடந்து நழுவி, பெரியவரைப் பார்க்கச் சென்றார்கள். சிவசங்கரன் ஓரமாக நிற்க,

''நிக்கறேளே உக்காருங்கோ. பேரு?''

''ஷிவ்ஷங்கர்.''

''ஊரு?''

''அமெரிக்காவ ப்ரின்ஸ்டன்ல பிஸிக்ஸ் ப்ரொபஸரா இருக்கேன்.''

''ப்ரின்ஸ்டன்லதானே ஜெயராமன்னு மடத்துக்கு ரொம்ப வேண்டப்பட்டவர் இருக்கார்.''

''எனக்குத் தெரியாது. ப்ரின்ஸ்டன்ல ஐன்ஸ்டைன்னு ஒரு மகாமேதை இருந்தார்.''

''உங்க பௌதிக சாஸ்திரம் என்ன சொல்றது ஆதிசங்கரர் சொன்னதைத்தானே!''

''இல்லை சுவாமி. பௌதிகம் ரொம்ப தூரம் போயிட்டது. ப்ரபஞ்சத்தையே ஒரு துகள், ஒரே ஒரு சக்தி, இதில் விள்க்க முடியுமா பார்க்கறா!''

''அதையேதான் - சக்தியும் சிவமும்னு ஒரு சரீரத்தில அர்த்தநாரீசுவர இருக்கோலத்தோட ஒரே பொருளா விளங்கறா!''

''இல்லை நாங்க சொல்றது வேற.''

''அது இங்கிலீஷ், இது சமஸ்கிருதம். பவானித்வம். இனி நீயாவே நான் ஆகிவிடுகிறேன். நான் என்னுடையது என்கிறதை உன்னிடத்திலேயே கரைக்கடறேன்னு சொல்றார்...''

''அப்படி இல்லை'' என்றார் சிவசங்கரன்.

''வாங்க போகலாம்'' என்றாள் பாகீரதி.

''உங்களுக்கு பிராக்லின்ஸ்ல நம்பிக்கை இல்லையா?''

''இல்லை.''

''பால்ப்ரண்டன், ஆர்தர் கோஸ்லர் எல்லாரும் எழுதிருக்காளே படிச்சதில்லை?''

''இல்லை.''

''பரமாச்சார்யாள் மெஹபூப் நகர்ல சாதுர்மாஸ்ய பூஜைக்காக காம்ப் இருக்கறப்ப உங்களைப் போலத்தான் ஒருத்தர் அமெரிக்காவில இருந்து வந்திருந்தார். பஸ் ஸ்டாண்டில சைக்கிள் ரிக்‌ஷாவைப் போட்டுண்டு வந்தார். ஆசீர்வாதம் வாங்கிண்டார். அப்பல்லாம் நன்றாகவே பேசுவா. அவர்



கொடுத்த குங்குமத்தைத் தன் தலையிலே அப்பிண்டு ஆப்பிளைக் கொடுத்து அனுப் பிச்சார். அவர் மடத்திலேயே சாப்ட்டுட்டு ஏதாவது காண்ட்ரிப்யூஷன் பண்ணலாம்னு பர்ஸை எடுக்கறார். காணோம். பதறிப் போய்ட்டார். பர்ஸ் மட்டும் இல்லை. பாஸ் போர்ட்டு. 'ட்ராவலர் செக்'குங்கறானே - பதினஞ்சாயிரம் டாலர்... எல்லாமே காணும். அப்படியே ஒடிஞ்சு போய்ட்டார். எங்கன்னு தேடுவார்? சாப்ட்ட இடத்தில இல்லை. சைக்கிள் ரிக்ஷாக்காரனை வீடு தேடிப் போனா அவங்கிட்டயும் இல்லை. கடைசில எங்க இருந்தது தெரியுமா? பஸ் ஸ்டாண்டில சிமெண்ட் பெஞ்சில அவர் உக்காந்திருந்த இடத்தில. அந்த இடத்தில் ரெண்டாயிரம் பேராவது புழங்கிருப்பா. இதுக்கு என்ன சொல்றேள் சிவசங்கரன், மிராக்கிள் இல்லையா இது? இதை உங்க பௌதிக சாஸ்திரம் எப்படி விளக்க முடியும்?''

''நீங்க மிராக்கின்னு சொல்லலாம். நான் இதை பிராபபிலிட்டி - சான்ஸ் இப்ப டின்னுதான் சொல்வேன். தரிசனம் ஆச்சோல்லியோ போலாமா பாகி!'' அவர் புன்னகைத்துப் பிரசாதம் படாமல் கொடுத்தார்.

வெளியே வரும் போது பாகீரதி கோபத்தில், ''அவர்கிட்ட கூடவா ஆர்க்யு மெண்ட்?''

''ஏன்? அவரும் என்னைப் போல ஒரு ஆத்மாதானே? அதானே அத்வைதம் சொல்றது?''

**பா**ல்ராஜ் வெளியே காத்திருந்தான். ''வேகமா வாங்க நீங்க அதிர்ஷ்டம் பண்ணவங்க. மகா பெரியவரை இன்னும் அரை மணி பார்க்கலாமாம்!''

அந்த மண்டபத்தை ஒட்டி புறப்பட்ட க்யூ தெருவில் தொடர்ந்தது. மெல்ல மெல்ல நகர பாகீரதி ஓட்டமும் நடையுமாக அதன் வாலில் சேர்ந்து கொண்டாள். மற்றதெல்லாம் மறந்து போய் விட்டது.

ஒரு வெள்ளைக்காரி பல்பொடி கலரில் ஜிப்பா அணிந்து கொண்டு நிஷ்டையில் எதிரே திறந்திருந்த வாசலையே நோக்கிக் கொண்டிருந்தாள். உள்ளே இலேசான இருட்டாக இருந்தது. மெல்ல அணுகினார்கள்.

உள்ளே அந்த நூறு வயதுப் பெரியவர் ஏறக்குறைய மல்லாந்தவாக்கில் உட்கார்ந்திருந்தார். காவி முட்டாக்கின் மேல் இலைக் கிரீடம் வைத்திருந்தார்கள். முழங்கால் மடங்கியிருந்தது. யாரையும் குறிப்பாகப் பார்க்கவில்லை. அருகே ஒரு பிராமண இளைஞன் வரிசையை ''ம்ம் நகருங்க'' என்று துரிதப்படுத்திக் கொண்டிருக்க, அவ் வப்போது மாலையை அணிவித்துக் கழற்றிக் கொண்டிருந்தான்.

இளைஞன் பால்ராஜை அடையாளம் கண்டுகொண்டு, ''என்ன பால்ராஜ் எத்தனாவது தடவை தரிசனம்?''

''தொண்ணூறுங்க! அய்யா அமெரிக்காலருந்து வராரு''

''அமெரிக்காலருந்து நிறைய பேர் வரா! வாங்கம்மா கிட்ட பாருங்கோ!'' என்று பாகீரதியை அருகே அழைக்க,

பாகீரதி அந்தக் கணத்தில் தன் சகல கட்டுப்பாடுகளையும் இழந்து கண்ணீர் உதிர்க்க, புடைவை மேல் பட்டுத் தெறித்தது.

''பரமாச்சார்யாள்ட்ட சொல்லுங்கோ. இந்த க்ஷணத்துக்குத்தான் பத்தாயிரம் மைல் கடந்து வந்திருக்கோம். மேம்போக்கா இவர் குதர்க்கம் பேசினாலும் உள்ளுக்குள்ளே இவருக்கும் நம்பிக்கைதான். ஒரு பிள்ளை. பாலாஜின்னு பேர் வச்சோம். 12 வயசு வரைக்கும் சமர்த்தா வளர்ந்தான். பாழாப் போன அமெரிக்காவில அப்பாவுக்கும் பிள்ளைக்கும் சரிப்படாம வாக்குவாதம் வந்து வீட்டை விட்டுப் போய்ட்டான்! உலகம் பூரா தேடியாச்சு. நேப்பாள், சிலோன், ஜப்பான், எல்லாம் தேடியாச்சு. ஆக்ஸிடெண்டில போய்ட்டானா, செத்துப் போய்ட்டானா, இருக்கானா...? எம்புள்ளை போய்ட்டான். நிம்மதியே இல்லை. இன்னி வரைக்கும்!''

''பரமாச்சார்யாளைத் தரிசனம் பண்ணிக்குங்க. ஸார் நீங்களும்தான் ஸார்.''

அந்த இளைஞன் அருகில் சென்று அவர் காதுடன் சொல்ல, அவர் கைகளை உயர்த்தி வாழ்த்தினார். பாகீரதியின் நெஞ்சு நிறைந்தது. காட்டராக்ட் கண்ணாடி வழியாகப் பெரிய கண் ஒன்று அவளைப் பார்த்தது.

ஆப்பிள் பழத்தையும் ரோஜாவையும் கொடுத்து அந்த இளைஞன், ''எல்லாம் சரியாப் போய்டும். கவலைப்படாதீங்கோ. பையன் பேர் என்ன சொன்னேள்?''

''பாலாஜி.''

அவர்கள் வெளியே வந்தனர். சிவசங்கர் கோபமாக, ''ஏன் சின்னக் குழந்தை மாதிரி அழறே?

''சினிமால வர மாதிரி உன் பிள்ளை வருவான்னு நினைச்சியா!''

அவள் அடங்காமல் அழுதாள்.

''பாகி! பாகி டோண்ட் பி ஸில்லி. டோண்ட் மேக் எ ஸீன்! கமான்!'' அவளைத் தோளில் பற்றி, பரிவு என்பதன் முதல் அடையாளம் சற்றே தெரிய நடத்தி அழைத்துச் சென்றார்.

பின்னால் குரல் கேட்டது.

''டேய் பாலாஜி உங்க அப்பா அம்மா வந்திருக்காடா!''




# மாயக் குதிரை

ஆனந்த் எதிரே இருந்த காப்பி கோப்பையை எடுத்து உறிஞ்சியபடி ரங்காவிடம், ''உனக்கு என்ன இன்ட்ரஸ்ட் இந்த கேஸ்ல?'' என்றான்.

ரங்கா எல்லாவற்றையும் சுருக்கமாகச் சொன்னான்.

''புரியுது. கவலைப்படாதே! துரைவேலு இஸ் இன்னஸண்ட்'' என்றான்.

''அவன் இன்னஸண்ட்ங்கறதுதான் பிரச்னையே'' என்றான் ரங்கா.

ஆனந்த் சிரித்து, ''ஓ! துரைவேலு மேல உங்க ரசிகர்களுக்குச் சந்தேகம்! இல்லையா?'' என்றான்.

ரங்கா தலையசைத்தான்.

''வாட் அன் அப்ஸர்டிட்டி! குதிரைக்கு எப்படி வேணும்னாலும் ரேபிஸ் வந்திருக்கலாம். தர் மேனாட் பி எனி எவிடென்ஸ்.''

''ஆனந்த்! பொதுவா ஒரு கேஸுக்கு நீ எவ்வளவு சார்ஜ் பண்றே?''

''கேஸைப் பொறுத்தது.''

''மர்டர் கேஸுக்கு?''

''தி நேச்சர் ஆஃப் கிரைம் இஸ் இம்பார்ட்டண்ட். ஏன்?''

''துரைவேலுக்கு என்ன சார்ஜ்?''

''வா ராஜா! இப்பத்தான் புரியுது. எனக்கு ஃபீஸ் கொடுக்க துரைவேலுகிட்டே ஏது பணம்னு கேக்கற? இட் இஸ் நன் ஆஃப் மை பிஸினஸ். எனக்கு ஃபீஸ் ஒழுங்கா வந்தா போதும். இட் இஸ் தி ஜாப் ஆஃப் இன்கம்டாக்ஸ் பீப்பிள்.''

''ஆனந்த், உன்கிட்டே அந்தக் கேள்விக்கு விடை இருக்கா?''

''எந்தக் கேள்வி?''

''குதிரைக்கு எப்படி ரேபிஸ் வந்தது?''

''அதிமுட்டாள்தனமான கேள்விகள் எனக்குத் தோணாது. ஐயாம் ஸாரி!''

''துரைவேலு நிஜமாவே இன்னஸண்ட்டா?''

''ஏய், வாட் டு யு மீன்?''

''ஒண்ணுமில்லை. எனக்கு அவனோட அட்ரஸைக் கொடு...'' என்றான் ரங்கா.

''அவனுக்கு ஏது அட்ரஸ்? ப்ராட்வேல மீனாட்சின்னு ஒரு பாடாவதி லாட்ஜ்ல தங்கியிருக்கான்'' என்றான் ஆனந்த்.

மேஜர் கதாகர் ரங்கா சொன்னவற்றை எல்லாம் நிதானமாகக் கேட்டார். பேப்பர் வெயிட்டை உருட்டியபடி யோசனை செய்தார்.

''ரங்கா! கடைசியா ஓர் அஸ்திரம்! ரொம்ப பிரிமிட்டிவ், செஞ்சு பார்க்கலாமா?'' என்றார்.

''என்னது?''

''துரைவேலுவுக்கு ஒரு டெலிஃபோன் செய்யலாம்.''

''என்னான்னு?''

''இதப்பாரு துரைவேலு. எங்களுக்கு எல்லா விஷயமும் தெரியும். எங்ககிட்டே ஆதாரம் இருக்கு. நீ குதிரையை என்ன செஞ்சேன்னு எங்களுக்குத் தெரியும். இதைப் போலீஸ்ல சொல்லாம இருக்கணும்னா பணம் கொடு. எப்படி?'' என்றார்.

ரங்கா பெரிதாகச் சிரித்து, ''ஆலன் போ காலத்து டெக்னிக். இதெல்லாம் உதவாது கதா'' என்றான்.

''லெட் அஸ் ட்ரை'' என்றார் பழைய கஸ்டம்களில் அதிக நம்பிக்கையுள்ள ஐம்பத்தி ஒன்பது வயது மேஜர் கதாகர்.

கிருஷ்ணா டாவின்ஸி

மீனாட்சி லாட்ஜின் டெலிஃபோன் நம்பர் கண்டுபிடித்து ராத்திரி ஒன்பது மணிக்குச் சோம்பலான மானேஜரை அழைத்து துரைவேலுவைக் கூப்பிட்டார். மூன்று நிமிட அவகாசத்திற்குப் பின் துரைவேலுவின் பாமரமான ''ஹலோ'' கேட்டது.

''யாரு, துரையா?'' என்றார் ரங்காவைப் பார்த்துக் கொண்டே.

''ஆமாம். யாருங்க?''

''துரை, தப்பிச்சுடலாம்னு நினைக்கிறியா? முடியாது. என்கிட்டே ஆதாரம் இருக்கு.''

''ஆதாரமா? யாருய்யா நீ? புரியலையே?''

''துரை. என்கிட்டே எதுக்கு நடிப்பு? குதிரைக்கு எப்படி நோய் வந்தது, நீ என்ன செஞ்சேன்னு எனக்குத் தெரியும்...''

''யோவ், பைத்தியமா உனக்கு? யாருய்யா நீ?''

''பணம் கொடுத்தா சும்மா இருந்துடறேன் துரை. வக்கீலுக்குக் கொடுக்கறியே? எனக்கும் கொடுத்தாக் குறைஞ்சுடுவியா?''

''சோமாறி! யாருடா நீ?''

''கடைசியா கேக்கறேன். ஐயாயிரம் போதும். அதிகமில்லை. அந்த ஆதாரத்தைக் கொடுத்திடறேன்.''

''வைடா ஃபோனை.''

''சரி... வைச்சுடறேன்'' என்றார்.

துரைவேலுவின் அவசரமான குரல், ''இரு... இரு... வைக்காதே!... என்னை வந்து பாரு!'' என்றது.

மேஜர் சுதாகர் துரைவேலுவை மறுநாள் இரவு எட்டு மணிக்கு அவனுடைய லாட்ஜ் அறையில் சந்திப்பதாகச் சொன்னார். ரிஸீவரை வைத்து விட்டு ரங்காவிடம் திரும்பிப் புன்னகைத்தார்.

''ரொம்ப முன்ஜாக்கிரதை உள்ள டிரைவர் கேட்டேனே, கிடைத்தானா?''

''கிடைத்தான் சார், ஆனால் முன்பணமா இரண்டு மாதச் சம்பளம் அட்வான்ஸ் கேட்கிறான்!

– எஸ். முகம்மது யூசுப்



''என்ன சுதா?''

''பயப்படறான். என்னய்யா ஆதாரம் வைச்சிருக்கேன்னா நடுங்கறான்'' என்றார்.

''என்னது?'' என்றான் அதிர்ச்சியாக.

''எனக்கு எப்பவுமே உள்ளுணர்வு உதவும் ரங்கா... நீ என்ன பண்றே? நாளைக்குக் காலையில, சீக்கிரம் போய் துரைவேலுவைப் பாக்கற...''

''நானா?''

''பயப்படாதே! எல்லாம் சொல்லித் தர்றேன். ராத்திரிதான் வரச் சொல்லியிருக்கான் என்னை. அதுக்குள்ள சில உண்மைகளைக் கண்டுபிடிச்சாகணும். உன்னை ஆனந்தோட ஜூனியரா சொல்லிக்கோ. பாசாங்கு செய்; பயமுறுத்து! 'இதப் பாருப்பா, என்கிட்டே உண்மையைச் சொல்லிடு. அப்பத்தான் தப்பிக்க முடியும்'னு பயமுறுத்து...''

''ஆனந்தோட ஜூனியரா நானா! அதைவிட ஃப்ராட் எதுவும் கிடையாது. மூணு வருஷம் உள்ளே தள்ளிடுவாங்க... துரை என்னை ஒரு முறை சேம்பர்ல வேறே பார்த்துட்டான்... ஆளை விடுங்க!''

''சே! சே! அவனுக்கு எந்தவித சந்தேகமும் வராது. ஆனந்த் உன் நண்பன்தானே?''

''தொழில்னு வந்துட்டா நண்பனாவது ஒண்ணாவது!''

''ரங்கா! உனக்குத் துடிப்பா இல்லை? ஆர்வமா இல்லை? துரைவேலு உண்மையிலேயே யாருன்னு நெஞ்சு 'படக்படக்'னு அடிக்கலை உனக்கு?''

''அடிக்குதுதான். அதுக்காக ஆள் மாறாட்டம் பண்ண முடியுமா?''

''இஸ் இஸ் வெரி ஸிம்பிள் ரங்கா. வார்த்தை ஜாலம். முடிஞ்சதும் சமர்த்தா திரும்பி வந்துடு...''

ரங்கா யோசித்து அரைகுறை மனத்தோடு ''சரி'' என்றான்.

சூர்யாவின் மரணம் என்கிற அதிகப்படியான ஸென்ஸேஷனைப் பத்திரிகைகள் மறந்து விடாமல் ஊதி ஊதி நெருப்பைப் பாதுகாத்தன. 'இதுதான் துரைவேலுவின் வீடு' என்று ஒரு பத்திரிகையில் புகைப்படம் வெளிவந்தது. வக்கீல் ஆனந்துடன் சிறிய பேட்டி இன்னொரு பத்திரிகையில். விக்டோரியா இன்ஸ்டிட்யூட்டின் டாக்டர் ஷீலாராணியை ஒரு பத்திரிகை விசாரித்தது. சூர்யாவின் வீட்டிலிருந்த குதிரையின் புகைப்படத்தை அமர்க்களமாக வார்னிஷ் பேப்பரில் பிரசுரித்து 'இதுதான் கொலைகாரக் குதிரை!' என்றது இன்னொரு பத்திரிகை.

மறுநாள் காலை வெளிவந்த ஒரு பத்திரிகையில் ரசிகர் மன்றத் தலைவர் ஆக்ரோஷமாய்ப் பேட்டியளித்திருந்தார்.

''இந்தப் போலீஸ் கட்டுக் கதைகளை நம்ப நாங்கள் தயாராக இல்லை. குதிரைக்காரனைப் பிடித்துக் கோர்ட்டில் ஒப்படைத்





தால் விசாரணை முடிந்து விட்டதாக அர்த்த மில்லை. என்ன ஆயிற்று? அந்த ஆசாமி ஜாமீனில் வெளியே வந்து விட்டான். திறமையான வக்கீல் கிடைத்திருப்பதால் கேஸ் முடிவில் விடுதலையாகி விடுவான். அதன் பின்னணி மர்மங்களைக் கண்டு பிடிப்பது யார்? எங்களுக்குத் தெரியும். இதன் பின்னால் எவன் இருக்கிறான், அவன் இப்போது எவ்வளவு சந்தோஷமாக இருக் கிறான், என்பதெல்லாம் எங்களுக்குத் தெரி யும். அவன் சட்டத்தின் பிடியில் சிக்கும் வரை நாங்கள் சும்மா விட மாட்டோம்.''

ரங்கா நன்றாக உடையணிந்து கொண்டு கையில் சூட்கேஸுடன், அழுக் கான மீனாட்சி லாட்ஜ் மாடிப் படியேறி அறை நம்பர் பதினெட்டைத் தட்டித் துடிக் கும் இதயத்துடன் நின்றான். கதவு திறந்தது. துரைவேலு மார்பில் சட்டை ஏதுமின்றி வெறும் லுங்கியுடன், நேற்றைய இரவின் மதுவின் 'ஹாங்க் ஓவர்' மிச்சமிருக்க, சிவப் பான கண்களுடன் ''யாரு நீங்க?'' என்றான், சட்டென்று அடையாளம் புரியாமல்.

''என்னைத் தெரியலை? அன்னிக்குப் பாத்தீங்களே? வக்கீல் ஆஃபீஸ்ல. நான் ஆனந்த் ஸாரோட ஜூனியர்...'' என்றான் ரங்கா.

''அப்படீங்களா? வாங்கய்யா! உள்ளே வாங்க!'' துரைவேலுவின் உடலில் உடனே பணிவான பதற்றம் தொற்றிக் கொண்டது. ஒரு பாடாவதி நாற்காலியில் அமர வைத்து, ட்ரட்ரட்ர என்று மின்விசிறியைப் போட் டான்.

''ஐயா! காப்பி சாப்பிடறீங்களா?''

''இருக்கட்டும் துரை. உக்காரு.''

''பரவாயில்லைங்க.''

''அட, உக்காருப்பா!''

துரை தயங்கியபடி கட்டிலின் மேல் அமர்ந்து கொண்டான். ''ஐயா, என்ன விஷ யம்ங்க? இவ்வளவு காலையில வந்திருக் கீங்க?''

''ஆனந்த் ஸாரு சில விஷயங்களைப் பேசிட்டு வரச் சொன்னாரு. கேஸு ரொம்ப சிக்கலாயிருக்க துரை.''

துரை, ''ஆமாங்க. எனக்கும் பயமா யிருக்கு. நேத்து நைட்டு எவனோ ஃபோன் செஞ்சு என்னை மிரட்டினான். எல்லா விஷயமும் அவனுக்குத் தெரியுமாம். ஐயா யிரம் ரூபாய் கொடுக்கணுமாம். எனக்கு எதுவும் புரியல்லீங்க...'' என்றான்.

ரங்காவிற்கு ஆச்சர்யமாக இருந்தது. வெளிக்காட்டாமல், ''அட, யாரு அது? பேரு சொன்னானா? உன்னை எதுக்கு மிரட்டணுமம்?''

''எதுவும் சொல்லலைங்க. என் தலை யெழுத்து. இப்படி வெவகாரத்துல மாட்டிக் கிட்டேன்.''

''பயப்படாதே. எதுக்கு ஆதாரம் இருக் குதாம் அவன்கிட்டே?''

''தெரியலீங்களே. ஒரு எழவும் புரி யலை.''

''துரை, உனக்கு ஒரு பழமொழி தெரியு மில்லை? டாக்டர்கிட்டேயும் வக்கீல்கிட் டேயும் பொய் சொல்லக் கூடாது. ஆனந்த் எல்லாத்தையும் விலாவாரியா விசாரிக்கச் சொன்னாரு. கேஸ் உனக்கு எதிரா இருக்கு தாம். போலீஸ்கிட்டே ஏதோ வலுவான ஆதாரம் இருக்குதாம்.''

''ஐயா...'' என்று பதறினான் துரை.

(தொடரும்)



“அந்த மனசு! வித்வத் உள்ள வாளைப் பாராட்டற அந்தக் குணம்.... அந்த விஷயத்துல அவருக்கு நிகர் அவரே தான்!”

100 பற்றி 91 :

# “நெருங்கி



இன்றைக்குத் தன் 91வது பிறந்த நாளை ஸ்ரீ பெரியவர் முன்னிலையில் மெய்சிலிர்க்கக் கொண்டாடி இருக்கும் ராமச்சந்திர சாஸ்திரிகள், ஜகத்குருவுடன் 1923 முதலே தொடர்பு கொண்டுள்ள அவரது அன்பின் பாத்திரர். தள்ளாத வயதிலும் ஓயாது சமஸ்கிருத பாடம் நடத்திக் கொண்டிருக்கிறவர். காஞ்சி மடத்தில் வியாழன் தோறும் குருவார வித்வத் சபை என்கிற விவாத அரங்கை ஜகத்குருவின் ஆக்ஞையின் பேரில் நெடுங்காலமாக நடத்தி வருகிறவர்.

ஸ்ரீபெரும்புதூரில் உள்ள அவரது இல்லத்தில் அவரைச் சந்தித்து, காஞ்சி முனிவருடனான அவரது அனுபவங்கள் குறித்துக் கேட்ட போது ஒரு ஏழு வயசுப் பையனின் உற்சாகத்துடன் பேச ஆரம்பித்தார்.

எனக்கு அப்போ இருபது வயசு. திருவையாறிலே படிச்சிண்டிருந்தேன். அப்பொவெல்லாம் சமஸ்கிருதப் பாடம் படிக்கறதுன்னா ரொம்ப ஒசத்தி. (இப்பவும் ஒசத்திதான். படிக்கிறவாதான் குறைவு) 1923ன்னு ஞாபகம். திருவானைக்காவல தாடங்கப் பிரதிஷ்டை நடந்துண்டிருந்தது. பெரியவாதான் முன்ன நின்னு பண்ணிண்டிருந்தா. அவர்களுக்கு வேதம் படிக்கற பையன்கள்னா உசிர். கூப்பிட்டு வெச்சுப் பேசுவார். இந்த விஷயம் எங்களுக்குத் தெரிஞ்சது. உடனே நானும், நாலஞ்சு பேருமா கிளம்பிட்டோம்.

போறதுக்கு முன்னாடி நான் என்ன பண்ணேன், சமஸ்கிருதத்துல ரெண்டு, மூணு ஸ்லோகம் எழுதி எடுத்துண்டு கிளம்பினேன். திருவானைக்கா போனதும் அவர் இருக்கற இடம் விசாரிச்சுண்டு போனோம். அப்போ அவர் பட்டத்துக்கு வந்த புதுசு. மக்கள் வெள்ளமாட்டம் நிறைஞ்சிருந்தா. எப்படிடா அவரைப் பார்க்கப் போறோம்னு ஒரே திகைப்பு. சரி, முயற்சி பண்ணிப் பார்க்கலாம்னு அங்க இருந்த பெரிய மனுஷா சிலர்கிட்டே இந்த மாதிரி திருவையாறிலேர்ந்து நாலஞ்சு சமஸ்கிருத ஸ்டூடண்ட்ஸ் வந்திருக்கா. பெரியவாளைப் பார்க்கணும்னு இருக்கான்னு சொல்லச் சொல்லி அனுப்பிட்டோம்.

எங்களுக்கெல்லாம் பயங்கர ஷாக்! அடுத்த நிமிஷமே ‘உங்களைக் கூப்பிடறா’ன்னு வந்து சொன்னா. எப்படி இருக்கும் எனக்கு?

உள்ளே போனோம். சூரியன் பூமில உட்கார்ந்திருக்கறா மாதிரி அவர் இருந்தார். அப்ப அவருக்கு 29 வயசு. கிட்டே போனோம். 'உட்கார்' அப்படீன்னார். நான் ஒரு மாதிரி பயந்துண்டே, நான் கொண்டு போன ஸ்லோகங்களை அவர்கிட்டே கொடுத்தேன். மௌனமா வாசிச்சுட்டு ஒரு பார்வை பார்த்தார். மெல்லிசா சிரிச்சார். அவ்வளோதான்! அன்னிக்கு ஆரம்பிச்சது... இன்னி வரைக்கும் அவருடைய நிழல்லியே இருக்கிற பாக்கியம் எனக்கு வாய்ச்சது!

அவர் மனசு இருக்கே, என்ன சொல்றது... கேமரா மாதிரி! ஒருதரம் அதிலே விழுந்துட்டாப் போதும். மறக்கவே மறக்காது. அபாரமான ஞாபக சக்தி அவருக்கு. அதை நான் அனுபவப்பூர்வமாத் தெரிஞ்சுண்டேன். திருவானைக்கால முதல் தடவை பார்த்தேனே, அதோட அப்புறம் சில வருஷம் ஆயிடுத்து. ஸ்ரீபெரும்புதூர் காலேஜுல சமஸ்கிருத வாத்தியாரா வந்துட்டேன்.

அப்போ என்ன ஆச்சு, அவர் நாவல் பாக்கத்துக்கு வர்றதா நியூஸ் வந்தது. சரி, போய்ப் பார்த்துடணும்னு நெனச்சண்டிருந்தேன். என்னென்னமோ காரணத்துனாலே போக முடியாம போயிடுத்து. ஆனா என் ஸ்டூடன்ட்ஸ் சில பேர் போயிருக்கா போல ருக்கு. அவர்கிட்டே போய், 'நாங்க ஸ்ரீபெரும்புதூர்லேர்ந்து வர்றோம். ராமச்சந்திர சாஸ்திரிகளோட ஸ்டூடன்ட்ஸ்' அப்படீன்னு சொல்லியிருக்கா. அவர் என்னமோ விசாரிச்சிருக்கார். இவங்க என்னென்ன சொன்னாங்கன்னு தெரியல்லே.

இன்னொரு சமயம் நசரத்பேட்டைக்கு வந்திருந்தார். கட்டடத் திறப்பு விழாவோ என்னமோ. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுடக் கூடாதுன்னு நான் முன்னாடியே கிளம்பிப் போயிட்டேன். அங்கேயும் பயங்கர க்யூ! சரி பார்ப்போம்னு நானும் க்யூல நின்னேன். உள்ளே தீர்த்தப் பிரசாதம் குடுத்துண்டிருக்கா. மொள்ள நகர்ந்து கிட்டே போறதுக்குள்ளே ஒரு மணி, ஒண்ணரை மணி ஆயிடுத்து. என்னோட முறை வந்தது. தீர்த்தம் குடுக்கப் போனவர் சட்டுனு முகத்தைப் பார்த்து நின்னுட்டார். "ராமச்சந்திரா! நாவல்பாக்கத்துக்கு வராம போயிட்டியே, உன்னைப் பத்தி, நீ பாடம் நடத்தறதைப் பத்தி யார் யாரோ ரொம்பப் பிரமாதமா சொன்னா. எனக்கு எவ்ளோ பெருமையா இருந்தது தெரியுமா?"

அவர் சொன்னாரோ இல்லியோ எனக்கு அப்படியே... பொங்கிப் பொங்கி... என்னென்னமோ ஆயிடுத்து!

ஒரே ஒரு தடவைதான் பார்த்திருக்கேன். அதுவும் வருஷமாயிடுத்து. என் பேரை ஞாபகம் வெச்சண்டு, என் முகத்தை ஞாபகம் வெச்சண்டு... அது கூட ஒரு பக்கம் சாத்தியம்தான்னு வெச்சக்கலாம். என்னைப் பத்தி யாரோ பாராட்டினது, தனக்குப் பெருமையா இருந்ததுன்னாரே... அந்த மனசு! வித்வத் உள்ளவாளைப் பாராட்டற அந்தக் குணம்.... அந்த விஷயத்துல அவருக்கு நிகர் அவரேதான்!

அவரோட ஞாபகசக்தி பத்தி சொன்னதும் இன்னொன்னு ஞாபகம் வர்றது. அவரோட சிஷ்யர் ஒருத்தர் 'பஞ்ச பாதிகை'ங்கற ஸ்லோக புத்தகம் ஒண்ணு எழுதியிருந்தார். எழுதி முடிச்சதும் இவர்கிட்டே கொண்டு வந்து படிக்கப் பாருங்கோன்னு குடுத்தார். இவரும் சரின்னு வாங்கி கம்மா ரெண்டு தரம் பொரட்டிட்டு அப்புறம் படிக்கறதாச் சொல்லி வாங்கி வெச்சண்டுட்டார். ரெண்டு மூணு நாள்ல திருப்பிக் குடுத்துட்டார்னு நினைக்கறேன். சரியா ஞாபகம் இல்லே.

# வந்தால் கரைந்து போகலாம்!"



* ராமசந்திர சாஸ்திரிகள்

இந்த சிஷ்யர் அதை வீட்டுக்குக் கொண்டு போயிருக்கார். அந்த பிள்ளையாண்டானோட மாமா என்ன நினைச்சாரோ

- எதுக்குன்னும் தெரியலே - தடால்னு அதை நெருப்புல போட்டுட்டார்! சிஷ்யர் பாவம், ஒன்னு அழுதுண்டே இவர்கிட்டே வந்து விஷயத்தைச் சொல்லியிருக்கார். அதுக்கு இவர் என்ன சொன்னார் தெரியுமோ? சொன்னா பிரமிக்கப் போயிடுவா.

''நீ ஒண்ணும் கவலைப்படாதே. நீ படிக்கக் குடுத்த போது அதை நன்னா படிச்சுட்டேன். முழுக்க ஞாபகம் இருக்கு. நான் சொல்றேன்; நீ எழுதிக்கோ!''

ஒவ்வொருத்தருக்கும் ஒரு 'ஸ்பெஷாலிட்டி' இருக்கும். அவரோட 'ஸ்பெஷாலிட்டி'யா நான் நினைக்கறது, அவரோட அணுகுமுறைதான். தூரத்துலேர்ந்து (மனசளவில்) நின்னு கவனிச்சா இது புரியாது. கிட்ட வரணும். அவரோட கரைஞ்சு போயிடணும். அப்போ புரியும்.

ஒருதரம் அவர் கர்நாடகாவிலே பெல்லாரி போற வழியில 'ஹகரி'ன்னு ஒரு இடத்துல கேம்ப் போட்டிருந்தார். நான் அப்போ மந்திராலயம் போயிருந்தேன். இவர் இங்க வந்திருக்கார்னு விஷயம் தெரிஞ்சதும் பஸ் பிடிக்கக் கிளம்பிட்டேன். இடமும் புதுசு. மொழியும் புதுசு. மனுஷாளும் புதுசு. எனக்கு அங்கே, அப்போ தெரிஞ்ச ஒரே ஆத்மா பரமாச்சார்யார்தான்! எப்படியோ தட்டுத் தடுமாறி சாயங்காலம் அந்த அஞ்சரைக்கா இடத்தைக் கண்டு பிடிச்சிப் போய்ச் சேர்ந்துட்டேன். உள்ளே தரிசனம் குடுத்துண்டிருந்தார். தூரக்கேயிருந்து பார்த்துட்டேன்! எனக்குத் தலை கால் புரியாத சந்தோஷம்! விறுவிறுன்னு கிட்டே போனேன்.

நான் நேரா பிரயாணத்துலேர்ந்து வர்றது என் முகத்தைப் பார்த்தே அவருக்குத் தெரிஞ்சிருக்கணும். பார்த்தாரோ இல்லியோ, ''என்னடா இது ராமச்சந்திரா! நேரா வரே? போய் சந்தியாவந்தனமெல்லாம் முடிச்சுட்டு வா. போ!'' - ஒரு மாதிரி கோபமாத்தான் சொன்னார்னு நெனைக்கறேன். சரி, நாம பண்ணது தப்புன்னு நெனச்சுண்டு விறுவிறுன்னு போய்க் குளிச்சி, சந்தி, ஜபம் எல்லாம் முடிச்சுட்டுப் போறேன்.

என்னமோ மீட்டிங். நிறைய பண்டிதர்களெல்லாம் இருக்கா. இவரும் இருக்கார். நான் உள்ளே நுழைஞ்சதும் ''வா! வந்து உட்காரு!'' அப்படீன்னார். அதுக்கு அர்த்தம், 'நீயும் விவாதத்துல கலந்துக்கோ' அப்படீன்னு.

விஷயம் என்னன்னா, 'பிக்ஷு சூத்ரம்'னு ஒண்ணு இருக்கு. சன்யாசிகளுக்கான விதிமுறைகள், அனுஷ்டானங்கள் பத்தியெல்லாம் சொல்லற புத்தகம் அது. அவாளோட வாதம் - இந்த பிக்ஷு சூத்ரம், சன்னியாசிகள் மட்டும்தான் படிக்கணும் - அப்படீங்கறது. ரொம்ப தீவிரமா எல்லா பண்டிதர்களும் விவாதம் பண்ணிண்டிருந்தா.

இவர் என்னைப் பார்த்து, 'பேசு' அப்படீன்னார். நான் சொன்னேன், ''பிக்ஷு சூத்ரம்'கிறது பிக்ஷுவாகப் போகிறவனுக்குத் தானே தவிர, சன்னியாசி ஆனவனுக்கு அதனால ஒண்ணும் பிரயோஜனம் இல்லே.''

பயங்கர எதிர்ப்பு இதுக்கு. அது எப்படி அப்படிச் சொல்லலாம், வழி வழியா வர்ற விதியை மாத்தறதான்னு கேள்வி கேட்க ஆரம்பிச்சுட்டா.

நான் என் ஆர்கியூமெண்ட்டுக்கு பலம் சேர்த்தாக வேண்டிய கட்டாயம். இத்தனை பெரிய பண்டிதர்கள் முன்னாடி ஆர்கியூ பண்றதான்னு ஒரு தயக்கம். ஆனா, அவாளுக்கெல்லாம் மேல ஜகத்குருவே 'பேசச் சொல்லிட்டாரே'ன்னு ஒரு நம்பிக்கை. சரின்னு என்னோட 'டிஃபென்ஸை' ஆரம்பிச்சேன். ''நட்ட சாஸ்திரம்னு ஒண்ணு இருக்கு. நடனமாடுகிறவாளுக்கு கைடு மாதிரி அது. இப்படி இப்படி ஆடணும். இது இது கூல்னு சொல்ற புத்தகம். நாட்டியம் கத்துக்கிறவனுக்கு அந்தப் புத்தகம்தான் சகலமும். அவன் முழுக்க கத்துக்கற வரைக்கும்தான் அந்தப் புத்தகம் தேவை. படிப்பு முடிஞ்ச பிறகு 'பிராக்டிகல்'தானே தவிர தியரி என்னத்துக்குப் பிரயோஜனப்படும்? அதே மாதிரிதான் பிக்ஷு சாஸ்திரமும். சன்னியாசி ஆகப் போகிறவன் அதைப் படிச்சாப் புண்ணியமுண்டு. ஆன பிறகு புத்தகம் எதுக்கு? புத்தகத்தை வெச்சுண்டு சன்னியாசம் பண்றதாவது?'' அப்படீன்னேன்.

அவ்வளவுதான். பெரியவா என்கிட்டே வந்தா.. எனக்கோ பயம். ஏதாவது தப்பா பேசிட்டோமோன்னு. அவர் சொன்னார், ''சாஸ்திரிகளே! ரொம்ப அற்புதமா பேசிட்டேள்... இன்னிக்கு உங்ககிட்டேருந்து நிறைய விஷயங்கள் தெரிஞ்சுது.''

யோசிக்கப் பார்க்கணும்... சந்தியாவந்தனம் பண்ணாம சேவிக்கப் போன போது 'என்னடா இது, சந்தியாவந்தனம் பண்ணாம வந்திருக்கே' அப்படீன்னு ஒரு ஸ்டூடண்ட்டை வாத்தியார் அதட்டறாப்ல அதட்டினவர் இப்போ எத்தனை மரியாதையோட...

என்கிட்டேருந்து அவர் தெரிஞ்சுக்கிறதாவது?

இதுக்குள்ளே எத்தனை எத்தனையோ சூட்சமங்களை அவர் காட்டிட்டார். எனக்குத்தான் ஒண்ணுமே புரியல்லே!

அது சரி. தெய்வ தத்துவத்தை எவனிக்குத்தான் மனுஷன் முழுசா புரிஞ்சிண்டிருக்கான்?

சந்திப்பு : பா. ராகவன்
புகைப்படம் : கோபிநாத்

# பனிப்பாறை

ஆபஸ்தம்பன்

## 8

துர்கா கடிகாரத்தைப் பார்த்தாள். நேரம் ஏழாகி விட்டிருந்தது. நாலரை மணிக்கு வருவதாகக் கூறியிருந்த விசுவத்தை இன்னமும் காணவில்லை. அவள் மனத்தில் ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு எழுந்தது.

''சே! என்ன மனிதர் இவர்!''

அன்று கஜுமுகா ஹாலில் நட்சத்திர இரவு. ஓர் அரசியல் பிரமுகரின் மனைவி மூலமாக இரண்டு டிக்கெட்டுகளைப் பெற்றிருந்தாள் துர்கா. இந்த நிகழ்ச்சிக்கு உடுத்துவதற்கென்றே அன்று காலை அவள் கடைக்குச் சென்று ஆயிரத்து எழுநூறு ரூபாய்க்கு டிசைனர் சேலை ஒன்று எடுத்து வந்திருந்தாள். வரும் வழியில் பியூட்டி பார்லரில் ஏறி முகத்தையும் அழகுபடுத்திக் கொண்டு வந்திருந்தாள்.

அத்தனையும் வீண்! தனக்கு என்று ஒரு காரும் டிரைவரும் இருந்தால் இந்த நிலை ஏற்படுமா, என்று பொருமினாள்!

விசுவம் எட்டரை மணிக்கு வந்த போது அவள் பொறுமையெல்லாம் இழந்து, கைகேயி போல் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தாள்.

விசுவம் - அவன் பங்குக்கு மனம் சரியில்லாமல் உள்ளே வந்தான்.

ஃபிரான்சு நாட்டின் பிரபலமான மருந்து கம்பெனியுடன் கூட்டு சேர்ந்திருந்த இந்திய மருந்து கம்பெனி ஒன்று தனது கிளையை இங்கு தொடங்கவிருந்தது. கொட்டிவாக்கம் அருகே ஒரு காலி மனையை வாங்கி அதில் பெரிய ஆராய்ச்சிக் கூடங்கள், உற்பத்திக் கிடங்குகள் தொடங்கத் தீர்மானித்திருந்தது. அதற்கான காண்டிராக்டை எப்படியாவது பெற வேண்டுமென்று விசுவம் தனது எஸ்டிமேட்டை வரைபடத்துடன் அனுப்பி வைத்திருந்தான். ஆனால் அதை 'போலார் கன்ஸ்டிரக்ஷன்ஸ்' பெற்று விட்டிருந்தது, என்று கேள்விப்பட்டதும் அவன் ஆத்திரமும் பொறாமையும் கட்டுக்கடங்காமல் வெடித்தது. வேறு எந்தக் கம்பெனி அதைப் பெற்றிருந்தாலும் அவனை அது பாதித்திருக்காது. அவளை வளர விடாமல் நசுக்க வேண்டும் என்று தான் எடுக்கும் முயற்சிகளையெல்லாம் மீறிக் கொண்டு மீண்டும் நித்யா முன்னேறுவதை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவளது பொருளாதார அழிவில்தான் தனது மனம் அமைதி அடையும் என்ற தீர்மானமான எண்ணம் அவன் மனத்தில் மேலோங்கி நின்றது.

மதிய உணவுக்குப் பிறகு ஆர்க்கிடெக்ட் ஆவுடையாப்பிள்ளை இந்தச் செய்தியை அவனிடம் வந்து கூறிய போது அவன் மன நிம்மதியை இழந்தான். உரிய காலத்தில் அவள் ஷாப்பிங் ஸென்டர் வேலையை முடிக்க இயலாமல் தவிக்கட்டும் என்று எண்ணி ஆரோக்கியசாமியைச் சரிகட்டினான். அவள் மிக்ஸரைப் பெற முடியாமல் திண்டாடும் நிலைமையை உருவாக்கி விட்டோம் என்ற எண்ணமே அவனுக்குள் ஒரு குரூரமான திருப்தியை ஏற்படுத்தியிருந்தது.

உடனேயே, அவள் எப்படிச் சமாளிக்கிறாள் என்று பார்க்க வேண்டும் என்ற எண்ணம் எழ, ராமனிடம் தான் வெளியே செல்வதாகச் சொல்லி விட்டுப் புறப்பட்டான். ஷாப்பிங் சென்டர் வேலை நடக்கும் இடத்தை அவன் நெருங்கிய போது சிமெண்ட் மிக்ஸரின் பலத்த ஓசையும், கூலி ஆட்களின் குரல்களும் அவன் செவிகளில் நாராசமாய் வந்து மோத, அவன் விரைவாகக் காரைச் செலுத்தி, சாலை ஓரமாக நிறுத்தினான்.

'கான்க்ரீட்' வேலை துரிதமாக நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். கூலி ஆட்கள் அசாதாரணமான உற்சாகத்துடன் வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

கோபமாகத் திரும்பி வந்த போது, தான் ஆரோக்கியசாமிக்கு அனுப்பியிருந்த பணம் திரும்பி வந்திருந்ததைப் பார்த்தான். அதிலிருந்துதான் இந்த மூர்க்கத்தனமான ஆத்திரம் மனத்தை ஆக்கிரமித்தது. வீடு வந்து சேரும் வரையில் அது எரிமலையாகக் குமுறிக் கொண்டிருந்தது. நேராக மாடிக்குப் போனவன் படுக்கையறையில் நுழைந்தான். கேபினெட்டிலிருந்து விஸ்கி பாட்டிலையும், ஐஸையும் எடுத்தவன், பின்னாலேயே வந்த துர்காவிடம் 'சிப்ஸ்' கொண்டு வருமாறு கூறி, ஜன்னலோரமாக இருந்த சோபாவில் சாய்ந்து கொண்டான்.

அவள் நகராமல் அங்கேயே நின்று கொண்டிருந்தது அவனுக்குப் புதிராகவிருந்தது.

தான் சொல்கிறபடி எல்லாம் 'வாலைக் குழைத்து வரும் நாய் போல்' நடந்து

கொள்ளும் இவளுக்கு இன்று என்ன வந்து விட்டது என்று எண்ணிக் குழம்பினான்.

அவள் அழுகைக் குரலில் கேட்டாள் -

''இன்னைக்கு ஸ்டார் நைட்னு சொல்லியிருந்தேனே. மறந்து போயிட்டேளா?''

''குட்நெஸ்! நிஜமாகவே மறந்து விட்டேன் துர்கா. இன்னைக்கு வேலை ரொம்ப பளுவும் டென்ஸ்மா; நகர முடியலை! நீ போயிருக்கலாமில்லை?''

''நான் மட்டுமா? எப்படிப் போறது? கார் வேண்டாமா? விலை பிடிச்ச புடைவையைக் கட்டிண்டு நகையெல்லாம் போட்டுண்டு டாக்ஸில எப்படிப் போறது? ஒங்க கௌரவம் என்ன ஆறது?'' படபடவென்று பொரிந்தாள்.

''ஹேய்! என்ன இது? மை ஸ்வீட் லிட்டில் ஏன்ஜெல்! இதற்குப் போய் அழுவாளா என்ன? கமான் - இப்படி வா'' அவன் கைநீட்டி அவளைத் தன் மடியில் சாய்த்துக்



கொண்டான். விஸ்கியை டம்ளரில் ஊற்றி, அவள் வாயருகே கொண்டு சென்றான்.

''கமான்! டேக் எ ஸிப்! என்னோட சமத்து இல்லை?''

அவள் முறைத்தாள்.

''ச்சீய்! இதையெல்லாம் நான் குடிக்கறதா?''

''ஏன் குடிக்கக் கூடாது? கமான் டியர், ஒரே ஒரு ஸிப்...'' - அவன் கை அவளைச் சுற்றி இறுக்கியது.

அவள் திமிறினாள்.

''சே! விடுங்கோ! உங்களால ஜோரான ஸ்டார் நைட் மிஸ்ஸாயிடுத்து.''

அவன் உரக்கச் சிரித்தான்.

''இதைப் பாரு ஸ்வீட்டி. உனக்கு ஸ்டார் நைட்டை விட ஜோரான சமாசாரம் காட்டறேன்.''

ப்ரீஃப்கேஸைத் திறந்து மூன்று வீடியோ கேஸட்டுகளை வெளியே எடுத்தான்.

''போ. நமக்கு ஏதாவது சாப்பிடக் கொண்டு வா. சாப்பிட்டுண்டே பார்க்கலாம்.''

டீ.வி. திரையில் ஓடிக் கொண்டிருந்த வக்கிரமான படத்தின் மீது அவன் மனம் அதிக நேரம் லயிக்கவில்லை. ஒன்றரை மணி நேரமாக அவன் மறக்க நினைத்த சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக மனத்திரையில் வலம் வந்தன. அடி மனத்தில் கனன்று கொண்டிருந்த கோபமும் வெறுப்பும் இப்போது பிரும்மாண்டமான பரிணாமத்தை அடைந்திருந்தன.

மனத்தில் விசுவரூபமாக நித்யாவின் உருவம் தெரிந்தது. அவளை மறக்க முயன்றான். முடியவில்லை. எங்கு பார்த்தாலும் அவள் உருவமே கண்முன் தோன்றி அவனை இம்சித்தது. அவளை அடைய முடியவில்லையென்ற அடிப்படை ஏமாற்றம் ஆத்திரத்தை எழுப்பியது. அவள் தலை நிமிர்ந்து சந்தோஷத்துடன் நிற்கும் வரையில் இந்த வெறி அடங்காது என்று தோன்றியது.

''அரிச்சந்திரன் வேலை கேட்டு வந்தால் என்ன வேலை கொடுக்கலாம்?''

'' 'மெய்'காப்பாளர் வேலை!''

- அதிரை யூசுப்



அவளை அழிக்க வேண்டும்! தலையெடுக்காதவாறு கீழே தள்ளிவிட வேண்டும்!

வெறியுடன் தூர்காவை மூர்க்கமாக அணைத்துக் கொண்டான்.

கபாலீசுவரர் கோவிலுக்கு அருகே இருந்த தெருவுக்குள் நுழைந்து பிரசன்னாவின் வீட்டைத் தேடினாள் நித்யா.

வெள்ளிக் கிழமை மாலை வேளையானதால் தெருவில் மனிதர்கள் கூட்டம் அலையாகத் ததும்பியது. ஜனநெரிசல்களுக்கிடையே கார்கள், சைக்கிள்கள், ரிக்ஷாக்கள் போன்ற வாகனங்கள். கோவிலுக்குப் போவோர் வருவோரின் கூட்டம். நடைபாதையோரக் காய்கறி வியாபாரிகளின் குரல்கள். பிளாஸ்டிக் சாமான்கள் கடை, புத்தகக் கடை, நகைக் கடை, துணிக்கடை - எல்லாவற்றிலும் கூட்டம். விலைவாசி உயர்வு பற்றிப் பத்திரிகைகளிலெல்லாம் அலறியாகிறது. ஆனாலும் சாமான்களை வாங்குவோரின் கூட்டம் நாளுக்கு நாள் அதிகரிக்கத்தான் செய்கிறது. அத்தியாவசியப் பொருள்களை விற்பனை செய்யும் கடைகளை விட, ஆடம்பரப் பொருட்களை விற்கும் கடைகளில்தான் அதிகக் கூட்டம்.

சாராய வாடையுடன் வேண்டுமென்றே ஒருவன் மேலே இடிக்க முயற்சி செய்தான். அசிங்கமாக இளித்தான். அருவருப்புடன் ஒதுங்கிய நித்யாவின் மனத்தில் கோபம் பொங்கியது.

''குத்துக் குத்து.. கூர்வடிவேலால் பற்று பற்று பகலவன் தனலெரி...'' முனகிக் கொண்டே நடந்தாள். நகரத்திலும் சூரர்கள் பெருகி விட்டார்கள்.

பிரசன்னாவுடன் இரண்டு மூன்று தினங்களாகப் பேச முடியவில்லை. அவனுடைய அலுவலகத்துக்குத் தொலைபேசி மூலமாகத் தொடர்பு கொண்ட போது அவன் உடல்நலம் சரியில்லாமல் லீவில் இருப்பதாகக் கூறினார்கள். அவன் வீட்டு ஃபோன் வேலை செய்வதாகத் தெரியவில்லை. அவர்களிடமிருந்து அவன் வீட்டின் முகவரியை வாங்கிக் கொண்டு அவனைப் பார்க்கப் புறப்பட்டாள்.

அவன் தனது வீட்டிலுள்ளவர்கள் பற்றிப் பேசியது இல்லை. அவள் மட்டும் அவனது தோழமையின் ஆழமான உறவின் தாத்பர்யத்தில் தன்னைப் பற்றிய விவரங்களை அவனிடம் கூறியிருந்தாள்.

இருபத்தி ஐந்து என்ற எண் மங்கலாகத் தெரிந்த அந்த வீட்டின் முன் அவள் நின்றாள். நின்றவாறே பிரசன்னாவை முதன் முதலில் சந்தித்ததை நினைவுகூர்ந்தாள்.

(தொடரும்)

# இலவசம்!








வாங்கும் ஒவ்வொரு ஸ்ரீபெட்
பாட்டிலுடனும் ஒரு 200
கிராம் சபீனா துலக்கும்
பவுடர் பாக்கெட் இலவசம்.
ஒவ்வொரு ஜாருடனும்
இரண்டு 200 கிராம் சபீனா
துலக்கும் பவுடர் பாக்கெட்.

**உங்கள் கவனத்திற்கு**

★ உங்கள் ஸ்ரீபெட் பில்களை
பத்திரமாக வைத்திருங்கள்.
ஒரு உன்னதமான வாய்ப்பு
காத்திருக்கிறது. விரைவில்
மேலும் விவரங்கள்.

இச்சலுகை 31 ஆகஸ்டு 1993
வரை மட்டுமே.




ஸ்ரீராம்
நிறுவனத்தின்
தரமான தயாரிப்பு!

## ஸ்ரீபெட்

**ஜார்கள் ◆ பாட்டில்கள்**

உடையாதவை

உணவுத்தரம் காப்பவை ◆ சுகாதாரமானவை

விநியோகஸ்தர்கள்:

ஸ்ரீராம் சேல்ஸ்
இன்டர்நேஷனல்

✱ இந்த வாய்ப்பு சென்னை, வேலூர், திருச்சி, கரூர், தஞ்சை, சேலம், ஈரோடு, கோவை, திருப்பூர், மதுரை, நெல்லை, மயிலாடுதுறை, கடலூர், தூத்துக்குடி, நாகர்கோவில், பாண்டிச்சேரி ஆகிய நகரங்களில் மட்டுமே.
இச்சலுகை இல்லாமலும் ஸ்ரீபெட் கிடைக்கும்.

AKSHAR SSI/9304 1

# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?




**ஆம்... உங்களது முன்னேற்றத்திற்காக, தினசரி அரைமணி நேரம் செலவிடத் தயாராக இருக்கிறீர்களா? அப்படியானால் மேற்கொண்டு படியுங்கள்!...**

★ வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை உங்களது முன்னேற்றத்திற்கு ஒரு தடையாக இருக்கிறதா?

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெற முடியவில்லையே என்று வருத்தப்படுகிறீர்களா?

★ கவலையை விடுங்கள்... நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை அடைய உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் ஒதுக்கினால் போதும்!

ஆம் - இந்த அரைமணி நேரத்தில் நீங்கள் தினசரி மேற்கொள்ள வேண்டிய பயிற்சியினை மிகவும் எளிய முறையில் சொல்லித் தந்து, நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் உரையாட தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சி அளிக்கிறோம்.

எனவே, ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.

என்ன? பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால், உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சியாக ஒரு ஐந்து நிமிடம் செலவு செய்து ஒரு போஸ்ட் கார்டில் "நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி, .

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

---

என்ற முகவரிக்கு இன்றே அனுப்புங்கள் பயிற்சி பற்றிய விவரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கிறோம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

NAGA



# சங்கரின் சீடர்கள்

நடுநாயகமாக ஆதி சங்கரர், பவ்யமாக அமர்ந்துள்ள நான்கு சீடர்கள்...இந்தப் படத்தைப் பார்த்துள்ள நம்மில் பலர் அச் சீடர்கள் யார் என்பது பற்றி யோசித்திருக்கக் கூடும். இதுவரை யோசிக்காவிட்டால் இப்போது தெரிந்து கொள்வோமே. சீடர்கள் நால்வரும்

பத்மபாதர், சுரேஸ்வராச்சார்யார், தோடகாச்சார்யார், ஹஸ்தாமலகர் ஆகியோர்.

பத்மபாதர் பிரும்ம சூத்ர பாஷ்யத்தின் முதல் நான்கினுக்கு பஞ்சபாதிகா என்ற உரை எழுதியுள்ளார்.

சுரேஸ்வராச்சார்யார் தமக்கு அடுத்த பீடாதிபதியாக சங்கரரால் நியமிக்கப்பட்டவர். காஞ்சி சங்கர மடத்தில் சுரேஸ்வராச்சார்யார் சன்னிதி உள்ளது.

தோடகாச்சார்யார் தோடகம் என்ற விருத்தத்தில் பகவத்பாதாள் குறித்து சுலோகங்கள் இயற்றியவர். 'தேசிகோத்தமரான சங்கரருக்கு என் நமஸ்காரங்கள்' என்று முடிவுறும் எட்டு பத்திகளைக் கொண்ட தோடகாஷ்டகம் குரு வந்தனையாக இன்றும் பாடப்படுகிறது. தோடகர் காஞ்சியில் சித்தி அடைந்தார்.

ஹஸ்தாமலகர் இயற்றிய அத்வைதபரமான சுலோகங்களுக்கு சங்கரரே ஹஸ்தாமலகிய பாஷ்யம் எழுதியிருக்கிறார். சீடரின் படைப்புகளுக்கு குரு பாஷ்யம் எழுதுவது எவ்வளவு பெரிய பாக்கியம்! சீடரின் பெருமை வியப்பு ஏற்படுத்துகிறது எனில் குருவின் பெருந்தன்மை பிரமிக்க வைக்கிறது.

சரி, இந்த ஆதி குருவின் குரு யார்.....?

அவர் பெயர் கௌடபாதாச்சார்யார்.

தகவல்கள் உதவி :

**பேராசிரியர் வீழிநாதன்.**

# மகத்தான நேரங்கள்!



**மி**ட்னாப்பூரில் பரமாச்சார்யாள் தங்கியிருக்கிறார். சில அரசியல் கைதிகள் சிறையில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் ஸ்வாமிகளின் வருகையை அறிந்து தரிசனம் செய்ய விரும்புகிறார்கள். சிறை அதிகாரி சரியான கெடுபிடிப் பேர்வழி. எப்படியோ ஒரு மணி நேரம் - மாலை நாலு முதல் ஐந்து வரை... அனுமதி வழங்கித் தகுந்த பாதுகாவலோடு அனுப்பி வைக்கிறார்.

அந்த அரசியல் கைதிகள் வரும் போது தரிசனம் முடித்து ஸ்வாமிகள் ஓய்வுக்குப் போய் விடுகிறார். அவர்களுக்கு அனுமதி கிடைக்கவில்லை. ஏமாற்றத்தோடு அவர்கள் திரும்பும் போது, அரவம் கேட்டு ஸ்வாமிகள் விசாரிக்கிறார்.

''ஆமாம்... கைதிகள் வந்தார்கள். நேரமாச்சுன்னு அனுப்பிச்சுட்டோம்'' என்கிறார்கள் மடத்து ஆசாமிகள்.

''கூப்பிடு... உடனே வரச் சொல்லு'' அருளாணை பிறக்கிறது.

அந்தக் கைதிகளின் முன்னால் அருள் மழையே பொழிகிறார் ஸ்வாமிகள். திருப்தியோடு விடைபெறுகிறார்கள் அந்த பயங்கர வாதிகள்.

**கு**ம்பகோணத்தில் பரமாச்சார்யாள் தங்கியிருந்த போது.. ஜம்னாலால் பஜாஜும் ராஜாஜியும் அங்கு வருகிறார்கள். ராஜாஜி நான்கைந்து நாட்கள் சுற்றுப் பயணத்தில் களைத்துப் போய் ஸ்னானம் கூட முடிக்காமல் இருந்ததால் தரிசனத்துக்குச் செல்லாமல் கீழேயே நின்று விடுகிறார்.

பஜாஜ் வந்ததும் பரமாச்சார்யாள் கேட்கிறார்.

''கூட யார் வந்திருக்கா...''

''ராஜாஜி, அவர் ஸ்னானம் முடிக்கல்லே... அதனாலே மேலே வரல்லே...''

''பரவாயில்லே வரச் சொல்லு, உங்களை மாதிரி பொதுஜன சேவையிலே



● பாபுஜி : பசி மறந்தார்



● ராஜாஜி : பசித்தார்

இருக்கறவாளுக்கு நித்யானுஷ்டானங்களுக்கு நேரம் கிடைக்கறது சிரமம்தான். பொதுஜன சேவை பண்றது மட்டுமே உங்களைப் பரிசுத்தமாக்கிடறதே...'' என்றாராம் ஸ்வாமிகள்.

**வ**ரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சந்திப்பு, பாபுஜியுடன் நிகழ்ந்தது. 1927ம் வருஷம்

கேரளாவில் பாபுஜி ஒருபுறமும், பரமாச்சார்யாள் ஒருபுறமும் சுற்றுப் பயணத்தில் இருந்தார்கள். சத்தியமூர்த்தி, ஏ. ரெங்கசாமி அய்யங்கார் போன்றவர்கள் மூலம் பரமாச்சார்யாளைப் பற்றி அறிந்திருந்த பாபுஜி, அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி சுவாமிகளைத் தரிசிக்க விரும்பினார்.

ஆசார்யாளின் நல்லிசேரி முகாமில் அந்த மகத்தான சந்திப்பு நிகழ்ந்தது. அதுவும் ஒரு மாட்டுக் கொட்டகையில். பத்திரிகையாளர்கள் வெளியார் யாரும் அனுமதிக்கப்படாத முற்றிலும் தனிப்பட்ட சந்திப்பு அது.

சமஸ்கிருதத்தில் பரமாச்சார்யாளும் ஹிந்தியில் பாபுஜியும் உரையாடினார்கள். முடிந்து வெளியே வரும் போது, பாபுஜியின் வழக்கமான மாலை உணவு நேரம் கடந்திருந்தது. ராஜாஜி அதை நினைவு படுத்தினார்.

பாபுஜி சொன்னார். ''ஆசார்யாளுடன் நான் உரையாடியது ஒன்றே இன்றைக்கு எனக்குப் போதுமான உணவு..''

பாபுஜி விடைபெறும்போது ஆசார்யாள் பம்ப்ளிமாஸ் பழம் ஒன்றைத் தந்தார். அது பாபுஜிக்கு மிகவும் பிடித்தமான பழம் என்பதால் மிகவும் மகிழ்ச்சியோடு அதைப் பெற்றுக் கொண்டார் அவர்.

**த**னுஷ்கோடியில் பரமாச்சார்யாள் நீராடிக் கொண்டிருந்த நேரம், தம்முடைய சீடர்களைப் பார்த்து, அவர்கள் அணிந்திருந்த ஆடைகளைக் கடலில் போடுமாறு ஆக்ஞாபித்தார். மதுரையிலிருந்து பிரத்யேகமாக வரவழைத்திருந்த கதர் ஆடைகளை ஒவ்வொருவருக்கும் வழங்கினார்.

அந்தக் காலத்தில் சுதேசிகள் அந்நியத் துணிகளை நெருப்பிலிடும் பழக்கத்தை பாபுஜி ஏற்படுத்தியிருந்தார். அதை விடக் கடலில் இடுவது சிறப்பானது என்று சுவாமிகள் எண்ணியிருக்கலாம். 1918ஆம் ஆண்டு முதல் சுவாமிகள் கதர்த் துணியை மட்டுமே அணியலானார். தனுஷ்கோடி நிகழ்ச்சிக்குப் பின் மடத்தின் அனைத்துத் தரப்பினருக்கும் கதரே ஆடையானது.

ஆதாரம் : PARAMACHARYA – சிட்டி ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ள வரலாற்று நூல். ஜனகல்யாண் வெளியீடு.

தொகுப்பு : பாலன் பூங்குழலி



''உங்களுக்கு முன்னால பேசிய அண்ணன் வைத்தியலிங்கம் பெரிய தப்புப் பண்ணிட்டார்னு திரும்பத் திரும்பச் சொல்லி வருத்தப்படறீங்களே, ஏன்? நல்லாத்தானே பேசினார்?''

''எனக்குன்னு வாங்கி வைக்கப்பட்டிருந்த சோடாவையும் கேட்டு வாங்கிக் குடிச்சுத் தொலைச்சுட்டாருய்யா!''

- ப. பாலாஜி



''என்னங்க இது, நீங்க எழுதின இந்தக் கதையை எத்தனை தடவை படிச்சாலும் என்ன சொல்ல வர்றீங்கன்னே ஒண்ணும் புரியமாட்டேங்குதே!''

''நீங்கதானே சொன்னீங்க சார், கதை எழுதினா அதைத் திரும்பத் திரும்பப் படிக்கற மாதிரி இருக்கணும்னு!''

- கவிட் ரவி



''எதுக்காக உன் பெண் கல்யாணத்தைக் கோயில்லே ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி வைக்கணும்னு பிடிவாதம் பிடிக்கறே!''

''அன்னிக்குக் கோயில்லே சமபந்தி போஜனம் இருக்குமே!''

- கே. வி.





● மனசுக்குச் சுத்தியைக் கொடுக்கக் கூடிய காரியங்களை மட்டும் செய். உலகில் உள்ள மிகுதி விஷயங்கள் தாமாகவே வந்தடையும். அப்படி வந்தடையா விட்டால் அது நஷ்டமாகப் படாது....



● பரமேசுவரன் நமக்குக் கற்பிக்கும் பாடம் மற்றவர்களைக் குறை சொல்லக் கூடாது; அவர்களுடைய குணங்களை மனமாற வாய்விட்டுக் கூற வேண்டும் என்பதுதான். இதை அவர் சந்திரனைத் தலையில் வைத்துக் கொண்டிருப்பதன் மூலமும் ஹாலஹால விஷத்தைக் கண்டத்தில் அடக்கியதன் மூலமும் தெரிவிக்கிறார்.



● உலகில் மிக மிக நெடுந்தூரப் பயணம் ஒருவனுடைய ஆத்மாவை நோக்கித்தான். அந்த ஆத்மாவோ நம்முடைய ஹிருதய குகையில் பிரகாசிக்கின்றது.

# சந்திரசேகரர்: கோலமும் கொள்கையும்

● உலகில் எல்லார் பிரியத்தையும் சம்பாதிக்க ஒரே வழி ஒவ்வொரு க்ஷணமும் நமக்குள்ள குற்றங்களைத் தெரிந்து கொண்டு அவற்றைப் போக்கிக் கொள்வதற்கு முழுப்பிரயத்தனம் செய்வதுதான்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.





வண்ணப்படங்கள் :
ஓம் சுப்ரமண்யம்
அட்டை வண்ணப்படம் : விக்னேஷ் ஸ்டூடியோ



• இளையாத்தங்குடி சதஸ்...



• கணபதி ஸ்தபதி

# சிற்பிகளுக்குப் பேருதவி

## கணபதி ஸ்தபதி

என் அப்பா வைத்தியநாத ஸ்தபதி அடிக்கடி காஞ்சிபுரம் சென்று பரமாச்சாரி யாரை வழிபட்டு வருவது வழக்கம். காஞ்சி மடத்தில் பின்புறமுள்ள மண்டபத்தை வடிவமைத்துக் கட்டியவர் என் தந்தைதான். மண்டபம் கட்டும் பணி நடந்து வரும் போது பரமாச்சாரியாரே கண்காணிப்பார். சமயத்தில் நேரம் கிடைக்கும் போது சிற்ப சாஸ்திரத்தைப் பற்றிப் பல கேள்விகளை என் தந்தையிடம் கேட்பார்.

சிற்பிகளின் படைப்புகள் பிரம்மாண்ட மாக இருந்தாலும், லோகாயத வாழ்க்கை யில் அவர்கள் படும் கஷ்டங்களை அவர் அறிவார். பாரத கலாசாரத்தைக் கட்டிக் காத்து ஆன்மிக சுகத்தைத் தரும் சிற்பக் கலை பற்றியும், வேத ஆகமங்களைப் பற்றியும் மக்களுக்கு எடுத்துச் சொல்லி, ஒரு மறுமலர்ச்சியை உண்டுபண்ண வேண்டும் என்ற அவரது விருப்பத்தின் அடிப்படை யில் துவங்கப்பட்டதுதான் வேத ஆகம, சிற்ப வித்வத் சதஸ்.

ராமநாதபுரம் மாவட்டம் இளையாத் தங்குடியில் 1965-ல் முதல் சதஸ் நடந்தது. வேத விற்பன்னர்கள், பட்டாச்சார்யார்கள், சிற்பிகள் எனக் கிட்டத்தட்ட ஆயிரம் பேர் கலந்து கொண்டார்கள். நமது புராதனக் கலைகளின் பெருமைகளும், வேத ஆகமங் களின் முக்கியத்துவமும் அந்த சதஸ்ஸில் அலசப்பட்டன. இரண்டாவது சதஸ் மதுரை யில் நடந்தது. நமது பழங்கால ஓலைச் சுவடிகள் யானை மேல் எடுத்துச் செல்லப் பட்டன. இப்படியாக, சிற்பக் கலை உட்பட வேத ஆகமங்களை மக்க ளிடம் எடுத்துச் சொல் லிப் பரப்ப ஆரம்பித்த பின்னர்தான் ஏகப்பட்ட கோயில்கள் கட்டப்பட் டன. ஸ்தபதிகளின் சிற்று விக்குத் தொடர்ந்து வேலை இருந்து கொண்டே இருந்தது. எங் கும் ஆன்ம உணர்வு பரவியது.

ஒரு முறை பரமாச்சார்யார் என்னிடம் தமிழ்நாட்டில் உள்ள சிற்ப அதிசயங்கள் பற்றிக் கூறி, 'உன்னால் அது போல செய்ய முடியுமா?' என்று கேட்டார். எனக்குக் கொஞ்சம் உதறல்தான். உங்கள் அனுக்கிர கம் இருந்தால் எதையும் செய்து முடிப் பேன்' என்று சொல்லி விட்டேன்.

ஆவுடையார் கோயில் கொடுங்கை, இசைத் தூண்கள், கல்மணி, கல் சங்கிலி, சிங்கம் வாயில் பந்து போன்ற அமைப்பு, மூக்கில் குச்சியைச் செருகினால் காது வழியாக வெளிவரும் சிலை அமைப்பு, இந்த ஆறுதான் சிற்ப அதிசயங்கள். எந்த ஸ்தபதியும், வேலையை ஒப்புக் கொள்ளும் போது 'இவை தவிர' என்று சொல்லித்தான் ஒப்புக் கொள்வார். 'சரி செய்து முடி' என்று அவர் ஆக்ஞை இட்டு விட்டார். நானும் இரவு பகலாகப் பாடுபட்டுச் சிற்ப அதிசயங் களைச் செய்து முடித்தேன். இப்போது அவை டில்லியில் மலைமந்திர் அடிவாரத் தில் உள்ள மண்டபத்தில் வைக்கப்பட்டிருக் கின்றன.

வடமாநிலங்களைச் சேர்ந்தவர்கள் மட்டுமல்ல, வெளிநாட்டினரும், மலை மந்திரில் உள்ள சிற்பங்களைப் பார்த்து அதிசயப்பட்டு நிற்கிறார்கள்.

தமிழகச் சிற்பக் கலையின் அருமை உலகெங்கும் பரவுகிறது.

சந்திப்பு : ஸ்ரீனிவாசன்



# கவலைகள் களையும் காஞ்சி முனி!



**ம**னிதாபிமானத்திலிருந்து மதாபிமானம் வரை; விஞ்ஞானத்திலிருந்து மெய்ஞானம் வரை; மனித மனோபாவத்திலிருந்து தெய்வகுணங்கள் வரை காஞ்சிப் பெரியவர்கள் தொடாத துறை எதுவுமே இல்லை.

அவர் விளக்கிச் சொன்னது போல, வேறு எந்த ஞானியும், மேதையும் விளக்கிச் சொன்னதாகவும் எனக்கு நினைவில்லை.

அவரது தனிமை, கல்வி, அறிவு, நுண்மாண் நுழைபுலம், தீர்க்கதரிசனம், எந்தப் பொருளின் மீதும் ஒரு தெளிவு, தெளிவான பொருளில் கூட தன் அபிப்பிராயம் என்ற பணிவான முத்திரை - இவையெல்லாம் வேறு எவரிடமும் காண முடியாத அம்சங்களாகும்.

பல இடங்களில் அநுபவப்பட்ட சம்சாரிகள் கூடக் காண முடியாத கருத்துக்களை அப்பழுக்கற்ற துறவியான அவர் காண்கிறார்.

ஜாதியைக் கடந்த ஒரு நியதியை, சமமாகப் போதிக்கிறார்.

**கா**ஞ்சிபுரத்தில் 'சங்கர பக்த ஜன சபை' என்று ஒன்றிருக்கிறது.

பலருடைய ஒத்துழைப்போடு அதை நிருவகித்து வருபவர்கள், 'வைத்தி', 'வைத்தா' இருவரும்.

அந்த பக்த ஜன சபை ஆண்டுதோறும் ஒருமலர் வெளியிடுகிறது.

அந்த மலரில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டுதான் பெரியவரின் தேனம்பாக்கம் தனிமைக் குடிலும், அங்கிருக்கும் பசுவும், சிறு நிலமும் பாதுகாக்கப்படுகின்றன.

சென்ற ஆண்டு, மலரை நான் வெளியிட வேண்டும் என்று வைத்தியும், வைத்தாவும் அழைத்தார்கள்.

நான் விழாவிலே பேசி முடிக்கும் போது மணி ஒன்பது பதினைந்தாகி விட்டது.

நானும், வைத்தியும், வைத்தாவும் பெரியவர்களைப் பார்க்கச் சென்ற போது,

---

கண்ணதாசன்

மணி ஒன்பது நாற்பத்தைந்து.

கொட்டகைக்குள்ளே துயில் கொள்ளத் தொடங்கிய பெரியவர், என் பெயரை வைத்தி சொன்னதும் எழுகின்ற அரவம் கேட்டது.

அரிக்கேன் விளக்கு மெதுவாகத் தூண்டப்படுவது தெரிந்தது.

கொட்டகைக்குள் சிறு கடன்களை முடித்து விட்டு பெரியவர் வெளியே வந்து, அதன் வாசற்படியிலேயே ஒரு பழம்பாயை எடுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

என்னிடம் அவர் கேட்ட கேள்விகள் அனைத்தும் என்னைப் பற்றி அவர் முன்பே அறிந்திருந்ததைக் காட்டின.

நான் கிணற்றோரமாக நின்று கொண்டே இருந்தேன்.

பெரியவர் சுமார் ஒரு மணி நேரம் என்னோடு பேசிக் கொண்டிருந்தார்.

நான் எழுதிய பல விஷயங்கள் பற்றி என்னிடம் கேள்விகள் கேட்டார்.

சேர நாட்டு மன்னராக இருந்து, திருமால் பக்தியில் ஆழ்வாராக மாறிய குலசேகர ஆழ்வாரைப் பற்றி அவர் முன்பே எழுதியிருப்பார் போலிருக்கிறது. அந்த விஷயத்தையே சற்று அதிகமாகக் கேட்டார்.

பிறகு சேர நாட்டுக்கும், தமிழ் நாட்டுக்கும் உள்ள ஒற்றுமையை விளக்கினார்.

''கொங்கு நாட்டில் 'திருச்செங்கோடு' என்று ஒரு ஊர் இருக்கிறது; கேரளாவில் 'கொல்லங்கோடு' என்று ஒரு ஊர் இருக்கிறது. 'கோடு' என்ற சொல் தமிழிலே மலையைக் குறிக்கும் என்பது உனக்குத் தெரியும். அப்படிப் பார்க்கப் போனால் சேரநாடு என்பது பழங்காலங்களில் தமிழ் நாடாகவே இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால், கொங்கு நாடு சேர நாட்டில் ஒரு பகுதியாக இருந்திருக்க வேண்டும்'' என்றார்.

அவர் மற்றொன்றும் சொன்னார் :

''மலையாள மொழிக்கும், தமிழ் மொழிக்கும் உள்ள ஒரு வித்தியாசத்தைப் பார் கண்ணதாசா. தமிழிலே 'வந்தான்' என்று சொன்னாலே, ஒரு 'ஆண் மகன் வந்தான்' என்று அர்த்தம். 'வந்தாள்' என்றால் ஒரு 'பெண்மகள்' வந்தாள் என்று அர்த்தம். மலையாளத்தில், 'வந்நு' என்பார்கள். அந்த வினைச்சொல்லில் வந்தது ஆணா, பெண்ணா என்பது தெரிவதில்லை. அதனால், 'அவனா, அவளா' என்பதைச் சொல்லியாக வேண்டியிருக்கிறது. ஆங்கிலத்திலும் அந்தக் கதிதான்'' என்றார்.

இளமைக் காலத்து ஞாபக சக்தி எனக்கு இன்னும் இருக்குமானால் அந்த ஒரு மணி நேர விவாதத்தையே நான் ஒரு புத்தகமாக்கி இருப்பேன். பல அற்புதமான விஷயங்கள் மறந்து போய் விட்டன.

இரவு ஹோட்டலுக்குத் திரும்பிய போது மணி பதினொன்று.

வெகு நேரம் அந்தச் சந்திப்பு என் கண்ணிலும் கருத்திலும் நின்றது.

மற்றும் ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து ஆறு மாதங்களுக்குப் பிறகு மறுபடியும் தேவம்பாக்கத்துக்குப் போனேன்.

ஆனால் அன்று, கூட்டம் அதிகம்; நான் பேச முடியவில்லை.

இப்போதெல்லாம் மனதில் ஏதாவது கவலைகள் தோன்றினால், 'ஒருமுறை காஞ்சிபுரம் போய் வரலாமா' என்று தோன்றுகிறது.

நான் எவ்வளவோ பேரை வாழ்க்கையில் சந்தித்திருக்கிறேன். யாருக்கும் இவ்வளவு நீட்சண்யமான கண்கள் இல்லை.

– *'சங்கர பொக்கிஷம்' என்ற நூலிலிருந்து.*
விலை ரூ. 11.00
(வெளியீடு : கண்ணதாசன் பதிப்பகம்)

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-93

முதல் பரிசு ரூ. 1500/-
இரண்டாம் பரிசு
ரூ. 1000/-
மூன்றாம் பரிசு
(இரு கதைகளுக்கு)
ரூ. 1000/-

பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதைக்கும் ரூ. 125/- அறிமுக எழுத்தாளருக்கு போனஸ்.

● கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர்கள் போட்டி முடிவு வரை வேறு எந்தப் பத்திரிகையிலும் எழுத மாட்டேன் என்ற உறுதிமொழி அளிக்க வேண்டும்.

● நடுவர் குழு பரிசுக் கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

● உறை மீது அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடவும்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறைகள் அனுப்புதல் அவசியம்.

● கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படக் கூடாது. ஒன்றுக்கு மேற்பட்ட கதைகள் அனுப்பலாம்.

● கடிதப் போக்குவரத்து கிடையாது.

● ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

கடைசித் தேதி : ஜூன் 15





# அம்மாவை எப்படிச் சமாளிக்க...?

"பவி! ஒரு சந்தோஷமான சேதி!"

"சொல்லுங்க."

"உன்னைக் கல்யாணம் பண்ணிக்க அம்மாகிட்டே சம்மதம் வாங்கிட்டேன்."

"நீ வேற ஜாதிப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கறது, நான் உயிரோட இருக்கற வரைக்கும் நடக்காது'ன்னு பிடிவாதமா இருந்தாங்க..."

"அவங்க மனசுக்கேத்த மாதிரி பேசித் தான் அவங்க எண்ணத்தை மாத்தினேன்... 'எல்லாம் கடவுள் சித்தம், உன் இஷ்டப்படி அந்தப் பொண்ணையே கல்யாணம் பண்ணிக்க'ன்னு சொல்லிட்டாங்க!" என்று ஆவல் மேலிட அவள் முகத்தைப் பார்த்தான்.

பவித்ராவிடம் ரகு எதிர்பார்த்த மலர்ச்சி இல்லை. தலைகுனிந்திருந்தாள்.

பதற்றமாய் ரகு அவள் தோளைத் தட்டினான்.

"ஏய் பவி! என்னாச்சு உனக்கு? எவ்வளவு சந்தோஷமான சேதி...! ஊமை மாதிரி இருக்கே?"

"இல்ல... உங்கம்மா ஒரு பழமைவாதி! காலம் பூரா அவங்களோட எப்படி மல்லுக் கட்டப் போறேனோன்னு யோசிச்சேன்... நான் ஒரு பிடிவாதக்காரியாச்சே!" - தானும் எதிலும் சளைத்தவள் அல்ல என்ற ரீதியில் இருந்தது பவித்ராவின் தொனி!

ரகு மெள்ள அவள் கையைப் பற்றினான்.

"அவங்க வளர்ந்த காலம் அப்படி. நவீன உலகத்தையும், மாறுதல்களையும் மூத்த தலைமுறை சட்டுன்னு ஜீரணிக்காது! நாமதான் கொஞ்சம் 'அட்ஜஸ்ட்' பண்ணிப் போகணும் பவி!"

"த பாருங்க! நான் யாருக்கும் அடி பணிஞ்சு போக மாட்டேன்! என் 'இன்டிவிஜுவாலிட்டி'ய யாருக்கும் பலிகொடுக்க மாட்டேன். எங்க வீட்லேயே நான் அப்படித் தான்! இது உங்களுக்கே தெரியும்!" - ரகுவின் விழிகளை நேர்க்கோட்டில் நோக்கி, பவித்ரா உறுதியாய்ப் பேசினாள்.

ரகுவின் கோபம் சுள்ளென்று தலை உச்சிக்கு ஏறிற்று. 'இவ்வளவு பிடிவாதக் காரியாக இருக்கிறாளே? இவளை என்ன செய்வது?' தானும் சூடான வார்த்தை பிரயோகத்தில் இறங்கினால் நிலைமை இன்னும் மோசமாகும் என்று அவன் அமைதியானான்...

ராஜகுமாரன்

''பவி! நல்லா யோசிச்சுப் பாரு... பிடிக்கலேன்னா போன்னு உதறிட முடியுமா? அம்மா அந்த மாதிரி உறவில்லையே! எனக்காக அம்மா எவ்வளவு கஷ்டப்பட்டிருக்காங்க... இந்தச் சம்மதம் நமக்குப் பெரிய சாதனை! லோ... நீதான்டா இப்ப கொஞ்சம் 'காம்ப்ரமைஸ்' பண்ணணும்... ப்ளீஸ் பவிம்மா!''

ரகுவின் கெஞ்சலான தோரணை பவித்ரா முகத்தில் மாறுதல் ஏற்படுத்தவில்லை. அவள் மௌனத்தில் இறுக்கமும், கோபமும் இருந்தன!

''விட்டுக் கொடுக்காம, அனுசரிக்கப் போகாம காதல் வெற்றியடையாது பவி!''

''அதுக்காக என் தனித்தன்மையை தாரை வார்க்கணுமா?''

''அன்பா, மென்மையா 'மூவ்' பண்ணா யாரையும் நம்ம வழிக்குக் கொண்டு வரலாம் பவி! இது தனித்தன்மையை இழக்கறது இல்ல. தற்காலிகமாத் தளர்த்திக்கிறது, அவ்வளவுதான்! நம்மை, அவங்க புரிஞ்சிக்கணும்னு எதிர்பார்க்கறதை விட்டுட்டு, அவங்களை நாம புரிஞ்சு நடந்துக்கிட்டா ஒரு பிரச்னையும் வராது!''

வேறொரு அம்பை வீச யத்தனித்தவளாய், பவித்ரா ரகுவை நிமிர்ந்து பார்த்தாள்.

''சரி ஒரு சின்ன விஷயம். அதுக்குப் பதில் சொல்லுங்க...''

''சொல்லு!''

''மாடர்ன் டிரஸ் போடுறதுல எனக்கு எவ்வளவு ப்ரியம்னு உங்களுக்குத் தெரியும்!''

''ஆமா!''

''உங்கம்மாவுக்கு நிச்சயமா இது பிடிக்காது. இதுக்கு என்ன பண்ணப் போறீங்க?''

அந்தக் கேள்வி அவனுக்குள் ஏவுகணையாய் இறங்கியது! பதில் சொல்லவில்லை. திணறலை வெளிக்காட்டாமல் சிறிது நேரம் மௌனமானான்...

கல்லூரி மாணவிகள் மாடர்ன் டிரஸ் அணிவதே அம்மாவுக்குப் பிடிக்காது. கல்யாணமான பெண். அதுவும் தன் மருமகள் நவீன உடை அணிவதை அம்மாவின் பழமை மனம் நிச்சயம் ஏற்காது!

'சரி! பிரச்னைகள் வரும் போது அவற்றை முகத்துக்கு முகம் எதிர்கொள்வதே சரி. இப்போதைய தேவையற்ற பயம் எதிர் விளைவுகளையே ஏற்படுத்தும்! முதலில் கல்யாணம். அப்புறம் அம்மாவையும், பவியையும் சமாதானப்படுத்தலாம். அம்மாவின் கேரக்டரைச் சொல்லி பவியை இப்போது அச்சுறுத்த வேண்டாம்!' - ரகு மனசுக்குள் தீர்மானித்தான்.

''நோ நோ! நீ நெனைக்கிற அளவுக்கு அம்மா பிற்போக்குவாதி இல்லை பவி. கல்யாணம் ஆன பிறகு பாரேன். நீயே அவங்களைப் பெருமையா பேசுவே!... ப்ளீஸ்



**இளையராஜாவின்**

**ராஜ்கிரண்**

பெருமையுடன் வழங்கும்

**தேவிகலா** A/c

**ரூபம்** A/c
4 காட்சிகள்

**நாகேஷ்** A/c
3 காட்சிகள்

**மகாராணி** A/c
பகல் காட்சி

ஸ்ரீ மாயி கிரியேட்டர்ஸ்

# அரண்மனை கிளி

கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன்

**ராஜ்கிரண்**

இந்தப் பட்டிமன்றம் போதுமே! வேற ஏதாச்சும் பேசுவோம்... பவிம்மா, எனக்குத் தலைய வலிக்குது. கொஞ்சம் நேரம் உம் மடியில தலைவைச்சுக்கவா...?''

ரகுவுக்கு ஒரு பக்கம் கல்யாணம் முடிந்த திருப்தி. ஒரு போராட்டம் முடிந்திருக்கிறது. மனம், பாரம் இறக்கி இளைப்பாறியது!

மறுபக்கம் இனமறியாத பயம். அம்மாவுக்கும் - பவித்ராவுக்கும் யுத்தம் தொடங்குமோ?

'பவி கேள்வி எழுப்பிய மாடர்ன் டிரஸ், பிரச்னைகளுக்குப் பிள்ளையார் சுழி போடுமோ? அதில்தான் அம்மாவின் முதல் அஸ்திரம் பாயுமோ?'

இரண்டு பெரிய சூட்கேஸ் நிறைய பவி, சுடிதாரும், சல்வார்கமீசும், நைட்டியும் கொண்டு வந்திருக்கிறாள்!

நேற்று வரை தொடர்ச்சியாய்க் கல்யாணச் சடங்குகள். அவளுக்குப் புடைவையைத் துறக்க சந்தர்ப்பமில்லை. ஆனால் இனிமேல்...

தாமதம் கூடாது. பவியிடம் விஷயத்தைச் சொல்லி, அவள் 'மாடர்ன் டிரஸ்' அணிய 'வாய்தா' வாங்க வேண்டும்!'

ரகு இந்தக் குழப்பத்துடன் வீட்டுக்குள் நுழைய...

அம்மா, பவித்ரா இருவரும் இல்லை.

எங்கே போயிருப்பார்கள் என்று ரகு யோசித்து முடிப்பதற்குள் உள்ளே வந்தார்கள்.

கரும்பச்சைப் பட்டுப் புடைவை. கையில் அர்ச்சனைத் தட்டு. நெற்றி நிறைய விபூதி குங்குமம்! பவி தெய்வீகமாய் இருந்தாள்!

அம்மாவின் நெற்றியில் பெரிசாய் விபூதிக் கோடு!

ரகு 'அப்பாடா!' என்று மனசுக்குள் ஆசுவாசப்பட்டான்.

''இந்தாங்க பிரசாதம்!'' என்று மின்னல் சிரிப்புடன் பவி கொடுத்த விபூதி - குங்குமத்தை, சந்தோஷமாய் நெற்றியில் இட்டான்...

''நாளைக்கு என்னால 'பீச்'சுக்கு வரமுடியாது ரமேஷ்.''

''அப்ப, இன்னைக்கே ரெண்டு பொட்டலமா சுண்டலை வாங்கிக் கொடுத்துடு...!''

- சீர்காழி வி. ரேவதி



'கடவுளே! அம்மாவும் - பவியும் எப்பவும் இப்படியே ஒற்றுமையா இருக்கணும்!'

''அம்மா! பழைய துணி இருக்கா... பழைய துணிக்கு பிளாஸ்டிக் பக்கெட், சில்வர் பாத்திரம்....'' வெளியில் குரல் வர, பவித்ரா ஆர்வமாய் வாசல் பக்கம் திரும்பினாள்.

''இருப்பா! பழைய துணி போடுறேன்!'' - வேகமாய் அறைக்குள் நுழைந்தாள்.

போன வேகத்தில், திரும்பிய பவித்ராவின் கையில் - அவள் பிரியம் பிரியமாய் அணியும், வண்ண வண்ண மாடர்ன் டிரஸ்!

ரகு அதிர்ந்தான்!

''பவித்ரா! உனக்கு என்ன ஆச்சு? ஏன் இதையெல்லாம் போடப் போறே?'' அம்மாவின் குரல் அதட்டலாய் வந்தது!

''ஆமா அத்தே! இதெல்லாம் உங்களுக்குப் பிடிக்காதுன்னு தெரிஞ்சுக்கிட்டேன்... உங்க விருப்பத்தை மீறி நடக்க நான் விரும்பலை...'' - பவி இயல்பாய், பவிச் சென்று சிரித்தாள்.

ஒன்றும் புரியவில்லை ரகுவுக்கு. அவளையே பார்த்தான்...

அம்மா சாந்த புன்னகையுடன் ''அடிப் பைத்தியமே!'' என்றவாறு பவித்ராவின் அருகில் வந்தாள்...

''பழைய துணியெல்லாம் இல்ல. நீ போப்பா!'' - வாசல் பக்கம் பார்த்துச் சப்தம் போட்டாள்.

''அன்பும் மரியாதையும் மனசுல இருந்தா போதும்மா! துணியில என்ன இருக்கு? உன் மனசு தங்கம். அது எனக்குத் தெரியும். உன் விருப்பம் போல, உன் வீட்டை விட சுதந்திரமா நீ இங்கே இருக்கலாம்! இந்தக் காலத்துப் புள்ளைங்களோட ஆசாபாசம் தெரியாதவளா நான்? இதையெல்லாம் பெட்டியில வை... போ... அவனுக்கு டிபன் கொடு!''

''பவி, என்னை விட பர்ஃபெக்டா எங்கம்மாவை ஸ்டடி பண்ணிட்டே... தேங்யூ பவி.. தேங்யூ'' - ரகு தனிமையில் பாராட்ட,

''நோ! நோ! நான்தான் உங்களுக்கு தேங்க்ஸ் சொல்லணும்...'' என்றாள் பவி.

''இதுக்கெல்லாம் நீங்கதான் காரணம்... நம்மை அவங்க புரிஞ்சுக்கணும்னு எதிர்பார்க்கறதை விட்டுட்டு, அவங்களை நாம புரிஞ்சு நடந்துகிட்டா ஒரு பிரச்னையும் வராதுன்னு நீங்க சொன்னீங்கல்லே, அதை நான் புரிஞ்சுக்கிட்டேன்.''

- அர்த்தபுஷ்டியுடன் பவித்ரா ரகுவைப் பார்க்க, அவன் - இமைகள் விரிய, பிரமிப்பாய், அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்...

* பெரியவாள் முன்னிலையில் வீணை, வேணு, வயலின் கச்சேரி



# சங்கீத சுவாமிகள்!

என்னுடைய சொந்த ஊரான லால்குடியில், கிட்டத்தட்ட ஐம்பது வருடங்களுக்கு முன், நான் ஐந்தாவது படிக்கும் போது, முதல் முதலாக ஸ்ரீமகா சுவாமிகளைத் தரிசித்தேன்.

லால்குடி புதுத் தெரு கடைசியில் உள்ள சங்கர மடத்தில் அப்போது முகாம் இட்டிருந்தார்கள். குழந்தைகளாகிய எங்களுக்கு, சுவாமிகள் கூட மூன்று யானைகள், குதிரைகள், மாடுகள், ஒட்டகம் முதலிய பரிவாரங்கள் இருப்பது, அவர்களை அடிக்கடி சென்று பார்க்கும் ஆவலைத் தூண்டியது. இந்தப் பரிவாரங்களுடன் மேளம், தாளம், நகரா முதலியவற்றுடன் ஸ்ரீசுவாமிகள் வர்ணமயமாக அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில், பட்டணப் பிரவேசமாக எல்லாத் தெருக்களுக்கும் வருகை தந்த காட்சி இன்னும் நினைவில் இருக்கிறது....

1972 - ல் நான் முதன் முதலாக அமெரிக்காவுக்குச் சென்று கச்சேரிகள் நடத்திவிட்டு வந்த பிறகு, திரு யக்ஞராமன் எனக்குச் 'சங்கீத சூடாமணி' விருது வழங்கத் தீர்மானித்திருந்தார். அதற்கு முன்பு, பெரியவர்களைத் தரிசித்து ஆசி பெற வேண்டும் என்பதற்காக, நானும் யக்ஞராமனும் அவர் அந்தச் சமயம் முகாமிட்டிருந்த ஆந்திராவிலுள்ள கருட்டப்பள்ளிக்குச் சென்று தரிசித்து விஷயத்தை அவரிடம் சொன்னோம். அன்று, சுமார் அரைமணி நேரம் அவர்கள் அந்தச் சிவன் கோயிலின் கோபுர வாயிலில் நின்று கொண்டு, ஸ்ரீதட்சிணாமூர்த்தி மகிமை பற்றி விரிவாக எடுத்துச் சொன்னார்கள். நாங்கள் மூவரும் தனித்திருந்த அந்தக் காலை வேளையில், பெரியவர்கள் ஸ்ரீதட்சிணாமூர்த்தியாகவே காட்சியளித்தார்கள். அவர் சொல்லுவதை மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தது மறக்க முடியாத அநுபவம். பிறகு எங்களை மறுநாள் ஒரு வீணை, ஒரு புல்லாங்குழல், ஒரு மிருதங்கம், ஒரு கடம் என்று எல்லா வாத்தியக்காரர்களையும் அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்கள்.

லால்குடி ஜெயராமன்

மறுநாள் சுமார் 15 கார்களில் பக்தர்கள் சூழ, சென்னையிலிருந்து கருட்டப்பள்ளி கிராமத்துக்குச் சென்றோம். பெரியவர்கள் எனக்கு எதிரே அமர்ந்து, முதலில் 'வாதாபி கணபதிம்' வாசிக்குமாறு உத்தரவிட்டார்கள். பிறகு, அன்று கார்த்திகை ஆனதால், தீட்சிதரின் கருட்டி ராகக் கீர்த்தனை 'பால சுப்பிரமணியம்' வாசிக்குமாறு சொன்னார்கள். பிறகு, 'கஞ்சதளாயதாட்சி' என்று வாசித்துக் கொண்டே இருந்தோம். 'நாத விந்து கலாதி' என்ற திருப்புகழைப் பாடிக் கொண்டே வாசித்தேன். அப்பொழுது, 'தீப மங்கள ஜோதி நமோ நம' என்ற அடி வரும் போது, மடத்திலிருந்து பெரிய அகலில் ஜோதியை ஏற்றிக் கொண்டு வந்து, பெரியவர்கள் முன்னிலையில் வைத்தார்கள். பெரியவர்கள் என்னைப் புன்சிரிப் புடன் பார்த்துக் கொண்டே, ''இன்று தீப மங்கள ஜோதி அல்லவா?'' என்றார்கள். அவரை வணங்கி ஆசிகள் பெற்றுக் கொண்டு திரும் பும் பொழுது மனது நிறைந்திருந்தது.

ஸ்ரீ தியாகராஜர் லால்குடியில் வந்து எனது மூதாதையர் இல்லத்தில் தங்கி, அவ்லூர் சுவாமி-அம்பாள் பேரில் சுவனம் செய்த ஐந்து பாடல்களாகிய லால்குடி பஞ்ச ரத்னத்தை, சுவர-தாளக் குறிப்புடன் புத்தக மாக வெளியிட முனைந்தேன். அந்த வெளியீட்டுக்கு முன்பு பெரியவர்களிடம் ஆசி பெறச் சென்றேன். பெரியவர்கள் சாவதானமாகப் படுத்திருந்தார்கள். பக்கத்தில் வந்து உட்காருமாறு கூறினார்கள். ''இந்தச் சாகித்யத்தைப் பதம் பதமாகப் பிரித்துச் சொல்லு!'' என்றார்கள். எப்படிப் பிரிக்க வேண்டும் என்று என்னைத் திருத்தினார்கள். ''சரி, எங்கே, இப்போது ஒரு ரத்னத்தைப் பாடு!'' என்றார்கள். அதுவரை யாரும் இவ்விதம் கூறி அறியாததால் ஆச்சரியத்தில் மூழ்கிப் போனேன். சாதாரணமாக எல்லாரும் ஒரு பஞ்சரத்னம், இரண்டு பஞ்சரத்னம், ஐந்து பஞ்சரத்னம் என்றுதான் சொல்லுவது வழக்கம். ஆனால் ஐந்து பஞ்சரத்னம் என்றால் 5 X 5 = 25 பாடல்கள் ஆயிற்றே! பெரியவர்கள் அழகாக, ''எங்கே ஒரு ரத்னத்தைப் பாடு!'' என்று சொன்னது, அன்றைக்கு ஒரு புதிய பாடம் கற்றது போலிருந்தது.

ஒரு முறை 'கஞ்சதளாயதாட்சி' பாடலைப் பாடும்போது, சரணத்தில் 'ஸ்ரீ காஞ்சன வசனே' என்று பாடினேன். பெரியவர்கள் உடனே, ''ஸ்ரீ காஞ்சி நிவசனே' என்று பாடு!'' என்று திருத்தினார்கள்.

அவர்கள் தேனம்பாக்கத்தில் இருந்த போது ஒரு முறை, அவர்களது ஜெயந்தி நாள். சுமார் இரண்டரை மணி நேரம் பாடியும், வாசித்தும் ஆனந்தம் பெற்றேன். திடீரென்று மங்கள ஆரத்தி தொடங்கியதும் எல்லாரும் எழுந்தார்கள். நாங்களும் பாடுவதை நிறுத்திவிட்டு, கற்பூர ஆரத்தியைக் கண்களில் ஒற்றிக் கொண்டோம். பிறகு காஞ்சிக்கு வந்து, பகல் உணவு அருந்தி ஓய்வு எடுத்துக் கொண்டோம். மாலை மறுபடி தேனம்பாக்கம் சென்று, விடை பெறுகையில் பெரியவர்கள், ''ஏன் காலையில் மங்களம் பாடாமல் திடீரென நிறுத்தி விட்டாய்? வாத்தியம் கொண்டு வந்திருக்கிறாயா?'' என்று கேட்டார்கள். உடனே காரிலிருந்து வாத்தியத்தை எடுத்து வந்து அவர்கள் முன்னிலையில் மங்களத்தை வாசித்த பிறகே ஆசி கூறி விடை கொடுத்தார்கள்.

சந்திப்பு : சாருகேசி

## பள்ளிப்பருவப் பெரியவாள்!



☼ திண்டிவனம் ஆற்காட் அமெரிக்கன் மிஷன் பள்ளியில் ஏழாம் வகுப்பில் படித்த சாமிநாதன் புனித பைபிள் கற்றுக் கொண்டு முதல் பரிசு வாங்கினான். சீக்கிரமே படிப்பில் பல பரிசுகள் வாங்கி வீட்டில் புத்தகங்கள் சேர்ந்தன.

☼ சுவாமிநாதன் ஒன்பதாம் வகுப்பில் படித்த போது பள்ளி ஆண்டு விழாவில் ஷேக்ஸ்பியரின் 'கிங் ஜான்' நாடகம். ஆர்தர் இளவரசனாக நடித்துப் பலரின் பாராட்டைப் பெற்றான்.

- பாலன் பூங்குழலி

விஜயசேகரன்

## 19. வாவின் மீது ஆணை!

மேகங்கள் ஏதுமற்ற சுத்தமான நீலவானத்தில் பருந்து ஒன்று பெரும் வளையமிட்டுச் சுற்றிக் கொண்டிருந்தது. பாறைகளையும் கள்ளிச் செடிகளையும் தவிர வேறு தாவரங்கள் எதுவும் அற்ற அந்தப் பிரதேசத்தில் முட்புதர்களிடையே ஓடிய சில நரிகளும், வெம்மை தாங்காமல் பாறைகளின் இடுக்குகளில் பதுங்கின.

களைத்திருந்த புரவிகளை அதிகம் விரட்டாமல் ஒரே சீரான வேகத்தில் செலுத்தியவாறு இரு வீரர்கள் வறண்ட அந்தப் பீடபூமிப் பகுதியின் குறுக்கே நீண்ட அந்தப் பாதையில் வந்து கொண்டிருந்தனர்.

# பாண்டியன்

நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்ட அரையன் மதுராந்தகனின் பார்வை உயர்ந்து, தலைக்கு மேல் வளையமிட்ட பருந்தை நோக்கியது. வெகு நேரமாக நிலவிய மௌனத்தை உடைத்த அரையன், ''ஜெயந்தா, இந்தக் காலைப் பொழுதிலேயே என்ன இப்படி அனல் தகிக்கிறதே!'' என்றான்.

''ஆம் பிரபு, உச்சிப்பொழுது நெருங்க நெருங்க அனல் காற்றும் பலமாக வீச ஆரம்பித்து விடும்'' என்றான் ஜெயந்தன்.

''இந்த வழியில் இதற்கு முன் வந்திருக்கிறாயா?''

''வந்திருக்கிறேன் பிரபு.''

''இது சுற்று வழியாகத் தோன்றுகிறதே, ஜெயந்தா?''

''ஆம் பிரபு, நேர்வழி குவளாலபுரம் ★ வழியாகச் செல்கிறது. நாம் அதை விட்டு விலகி வடமேற்கே முப்பது காத தூரத்திற்கும் அதிகமாகவே வந்து கொண்டிருக்கிறோம்.''

''கங்கபாடி மன்னன் நெஞ்சத்தைப் போல அவன் நாடும் வறண்டுதான் இருக்கிறது'' என்றான் அரையன்.

தலையசைத்து மறுத்தான் ஜெயந்தன். ''இந்தப் பகுதிதான் இப்படி இருக்கிறது பிரபு. ஒருநாள் பயணத்திற்குப் பிறகு பாதை முற்றிலும் மாறி விடும்.''

''அப்படியா?''

''ஆம் பிரபு. துங்கபத்திரையின் கிளை நதியொன்று குறுக்கே பாயும். அதை நெருங்க நெருங்க பூமி நல்ல வளமாக இருக்கும்'' என்றான் ஜெயந்தன்.

இரவு ஒரு சிற்றூரில் இளைப்பாறி, மீண்டும் மறுநாள் தொடங்கிய அவர்களது பயணம், முன்தினத்தை விடச் சற்று எளிதாகவே இருந்தது. மதிய உணவுக்காக ஒரு கிராமத்தில் சற்றுத் தாமதித்த போது, அந்தப் பிரதேசத்து மக்களிடம் அவர்களது மொழியிலேயே சரளமாக உரையாடிய ஜெயந்தன் முகத்தில் ஓர் இறுக்கம் படர்ந்தது. பயணம் தொடர்ந்த போது, ''இந்தப் பக்கம் ஏதோ சண்டை நடந்ததாகச் சொல்கிறார்கள்'' என்ற ஜெயந்தனின் பார்வை சுற்றியிருந்த பகுதிகளைக் கூர்மையாக ஆராயத் தொடங்கியிருந்தது.

''அங்கே பாருங்கள்'' என்று திடீரென்று கூவிய ஜெயந்தன் சுட்டிக்காட்டிய திசையில் பருந்துகள் தாழ்வாகப் பறந்து கொண்டிருந்தன. சில வெகு வேகமாகக் கீழே பாய்ந்து சண்டையிட்டுக் கொள்ளவும் செய்தன; ஒன்றையொன்று துரத்தின.

புரவிகளின் வேகத்தை அதிகப்படுத்திய இருவரும் அந்தப் பகுதியை நெருங்கினார்கள். தரையில் குறுக்கும் நெடுக்குமாகப் பல புரவிகளின் குளம்படிகள் தென்பட்டன. சில இடங்களில் ரத்தக் கறைகளும் தெறித்திருந்தன. புதர்களை விலக்கி, உள்ளே நுழைந்த ஜெயந்தன், அப்படியே உறைந்து போய் நின்றான்.

புதர்களிடையே சில வீரர்கள் மாண்டு கிடந்தனர். சோழ வீரர்கள் என்பது பார்த்த மாத்திரத்திலேயே உடையாலும் சின்னத்தாலும் தெரியவந்தது. அவர்களில் ஒருவன் பலவீனமாக மூச்சு விட்டுக் கொண்டிருப்பதை உணர்ந்து, ஓடிச்சென்று தன் புரவியின் பக்கவாட்டில் தொங்கிய நீர்க் குடுவையை எடுத்து வந்தான், ஜெயந்தன். இரண்டு வாய் நீரை அருந்தியதும் அந்த வீரனது தலை சரிந்தது.

அருகில் மயக்கம் தெளிந்த மற்றொரு வீரனது முனகல் ஒலிக்கவே, விரைந்து அவன் தலையை மெல்லத் தன் மடியில் சாய்த்துக் கொண்ட ஜெயந்தன், அவன்

★ தங்கம் விளையும் கோலார் பகுதி.

முகத்தை நீரால் துடைத்து, வாயிலும் நீரைப் புகட்டினான். வீரனின் விழிகள் வேதனையுடன் லேசாகத் திறந்தன. விலாப்புறத்தில் தெரிந்த காயங்கள் அங்கு ஒரே சமயத்தில் இரண்டு மூன்று ஈட்டிகள் பாய்ந்திருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்தின.

''வீரனே, என்ன நேர்ந்தது?'' ஜெயந்தனின் குரலில் அவசரம் இருந்தது.

அந்த வீரனின் பார்வை ஒருமுறை அரையனை ஏறெடுத்து நோக்கியது. அரையனின் நீண்ட வாளையும் அதன் பிடியில் பொறிக்கப்பட்டிருந்த புலியின் உருவத்தையும் கண்டவன் முகத்தில் ஒரு நிம்மதி தோன்றி, அடுத்த கணம் மீண்டும் கவலை படர்ந்தது.

''இளவரசர்... இளவரசர்...'' என்ற சொற்கள் ஈனஸ்வரத்தில் அந்த வீரனிடமிருந்து உதிர்ந்தன.

''யார் ராஜ ராஜரா? அவருக்கு என்ன?'' என்றான் ஜெயந்தன், பரபரப்புடன்.

வெகு சிரமப்பட்டு வார்த்தைகளை உதிர்த்தான் அந்த வீரன் : ''எங்களுடன் வந்த இளவலை மறைந்திருந்து தாக்கி...''

''சொல், மேலே சொல்'' அவனை லேசாக உலுக்கினான் ஜெயந்தன்.

வீரன் மெல்லத் தொடர்ந்தான் : ''ஜெயதுங்கன் நவிலைக் கோட்டைக்குச் சிறை பிடித்துப் போய் விட்டான்!''

ஜெயந்தன் சிலையாக உறைந்தான். சோழ மன்னர் குலோத்துங்கனின் இரண்டாவது மகனும், விக்கிரம சோழனுக்குச் சகோதரனும் வேங்கி நாட்டில் அரசப் பிரதிநிதியாயிருந்து பின் சாளுக்கிய போரிலும் கலந்து கொண்டவனுமான ராஜராஜன், சாளுக்கிய ஜெயதுங்கனால் சிறைப் பிடிக்கப்பட்டாரா!

# மகள்



தன் மடியை விட்டு அந்த வீரனின் தலை சரிந்ததை உணர்ந்ததும்தான் பிரமிப்பி லிருந்து விடுபட்டான் ஜெயந்தன். சுற்றிலும் கிடந்த சோழ வீரர்களின் ரத்தம் கசிந்த உடல்களைச் சற்றே ஆராய்ந்த அரையன், அவர்கள் நேரிடையான போரில் தாக்கப்பட வில்லையென்பதைத் தெளிவாக உணர்ந்து கொண்டான்.

அரையனின் முகம் கதிரவன் ஒளியில் சிவந்து ருத்திரனைப் போல் ஒளிர்ந்தது. கரம் வாளினை உருவியது.

அதனை விண்ணை நோக்கி உயர்த்திய அரையன் சபதமிட்டான் : ''இன்னும் ஒரே நாளில் அந்த ஜெயதுங்கனை இந்த வாளால் வெட்டிக் கொல்வேன்!''

அருகிலிருந்த ஜெயந்தனின் உடல் சிலிர்த்தது.

பெல்லாரி மாவட்டத்தின் வட எல்லையில், துங்கபத்திரையின் கிளை நதி ஒன்றின் கரையிலமைந்த நவிலை என்ற அந்தச் சிறிய ஊரை இன்றைக்கு நாம் பார்த்தால், அது பெரும் படைத்தளமாக இருந்ததற்கான அடையாளமோ, பெரும் போர் நடைபெற்ற இடமாகவோ கூற இயலாது. ஆனால் இடிந்து கிடக்கும் பழைய கோட்டைச் சுவர்களைக் காணும் ஆராய்ச்சிக் கண்களுக்கு அது எத்தனை வலிய கோட்டையாகவும் எத்தனை பெரிய கோட்டையாகவும் இருந்திருக்கக்கூடும் என்பது விளங்கும். பின்புறம் ஆற்றின் கரையில் இடிபாடடைந்து காணப்படும் பெரும் கூடம், போர்க்களிறுகளின் பயிற்சிக் களமாக இருந்திருக்கக்கூடும் என்பதும், அங்கு தாராளமாக ஆயிரம் யானைகளுக்கு மேல் கட்டி வைக்கலாம் என்பதும் புரியும். கலிங்கத்துப் பரணியும் இதனை உறுதிப்படுத்துகிறது.

மேலைச் சாளுக்கிய மன்னன், களிறுகளுக்குப் பயிற்சியளிக்கத் தனது மகன் ஜெயதுங்கனுக்குத் துணையாக தண்டநாயகர்கள் மூவரை அனுப்பியிருந்தான்.

கோட்டையின் பின்புறத்திலிருந்து நீண்ட மதில்கள் ஆற்றின் கரை வரை சென்றன. இடையே அமைந்திருந்த பகுதி களிறுகளைப் பழக்கும் களமாக விளங்கியது. ஆற்றைப் பார்த்தபடி இருந்த மதின் சுவரின் நடுவே பெரும் கதவுகள் பொருத்தப்பட்டு, களிறுகளை ஆற்றுக்கு அழைத்துச் செல்லும் வழியாகப் பயன்பட்டன. அந்தக் கதவுகளின் வெளிப்புறத்தில் எப்போதும் சில வீரர்கள் காவலாக நின்றனர்.

கோட்டையின் உட்புறக் கூடத்தில் தண்டநாயகர்கள் மூவரும் அமர்ந்திருக்க, ஜெயதுங்கன் எழுந்து உலவுவதும் மீண்டும் இருக்கையில் அமர்வதுமாக அமைதியின்றி இருந்தான். குறைந்த வீரர்களுடன் வந்து யதேச்சையாகத் தன்னிடம் சிக்கிக் கொண்ட சோழ இளவல் ராஜராஜனைப் பாதுகாப்பாக மேல் மாடத்தில் சிறைவைத்து விட்டாலும் அதன் பின்விளைவுகளை எண்ணிய போது ஆபத்தை விலை கொடுத்து வாங்கி விட்டோமோ என்ற கவலையும் அவனுக்குத் தோன்றியது.

குரூர மனம் படைத்தவனென்றும், யுத்த தர்மத்தை மதிக்காதவனென்றும், மறைந்திருந்து தாக்குவதையே போரில் பிரதானமாகக் கருதுபவனென்றும் பெயர் பெற்றிருந்த சாளுக்கிய ஜெயதுங்கன், வாட்போரில் சாளுக்கிய நாட்டில் தனக்கிணையான வீரன் கிடையாதென்ற பெயரையும் எடுத்திருந்தான்.

இருக்கையிலமர்ந்து அவனையே கவனித்துக் கொண்டிருந்த தண்டநாயகர்களில் ஒருவன் பேச ஆரம்பித்தான் :

''இளவரசே, வீணாகக் கவலைப்பட வேண்டாம். சோழ வீரன் ஒருவன் கூடத் திரும்பவில்லை. குலோத்துங்கனுக்குச் செய்தி தெரிய இரண்டு தினங்களாவது ஆகும். அதற்குள் நாம் கல்யாணபுரத்துக்குச் சென்று விடலாம்.''

ஜெயதுங்கனின் அடர்ந்த புருவங்கள் ஒன்றுகூடின. ''அந்தக் காலிங்கராயன் லேசுப்பட்டவனல்ல'' என்றான்.

சோழர் படையின் பிரதான படைத்தலைவனது பெயர் அங்கு உச்சரிக்கப்பட்டதும் மற்ற மூவருக்கும் நெஞ்சில் லேசாகக் குளிர் ஓடியது. அதற்குக் காரணமும் இருக்கவே செய்தது. படைகளைத் திட்டமிட்டு நடத்துவதில் இணையற்றவன் என்று எதிரிகளாலேயே பாராட்டப் பெற்றவனும், சாளுக்கியர் நடமாட்டத்தை முன் கூட்டி அறிந்து முறியடிப்பவன் என்று பெயர் பெற்றவனுமான காலிங்கராயன் தனது வீரர்கள் ஒவ்வொருவரையும் தவித்



''விருது பெற்ற அந்த சினிமா டைரக்டர் ஏன் சோகமாக உட்கார்ந்திருக்கார்?''

''அவர் எடுத்த சோகப் படத்தைச் சிறந்த நகைச்சுவைப் படம்னு சொல்லி விருது கொடுத்திட்டாங்களாம்!''

- ராஜு

தனியே அறிந்திருந்தான் என்பதும் அவர் களில் ஒருவன் திரும்பவில்லையென் றாலும் உடன் உணர்ந்து தக்க நடவடிக்கை எடுப்பான் என்பதும் பிரசித்தம். இளவரசன் இரவு திரும்பவில்லையென்றால் காலிங்க ராயன் பின்னர் உறங்கவே மாட்டான் என்று அறிந்திருந்த ஜெயதுங்கன், அதை வாய் விட்டுக் கூறவும் செய்தான். பிறகு, "எதற் கும் நமது வீரர்களைக் கோட்டையின் முகப் பில் குவிக்க ஏற்பாடு செய்து விடுங்கள்" என்று உத்தரவுமிட்டான்.

ஒரு தண்டநாயகன் சந்தேக விளக்கம் கேட்டான்: "சோழனை ஏன் கோட்டையின் மேல்மாடத்து அறையில் அடைக்க வேண் டும்? கீழ்த்தளத்துச் சிறையில் வைத்தா லென்ன?"

"கீழ்த்தளத்துச் சிறைக்கூடம் மூலை யாக அமைந்திருப்பதால் இருபுறமும் வழிகள் உண்டு. மேல்மாடத்து அறை அதிகப் பாதுகாப்புடையது. சாளரத்தின் கம்பிகளை வலுவாகப் புதைத்திருப்பதால் அந்த வழியில் தப்ப இயலாது. கம்பிகளை வளைத்தாலும் அத்தனை உயரத்திலிருந்து குதிக்க முடியாது" என்று விளக்கினான் ஜெயதுங்கன்.

ஏற்பாடுகள் என்னவோ திருப்தியாகத் தான் இருந்தன ஜெயதுங்கனுக்கு. என்ன தான் இருபது காதங்களுக்கு அப்பால் குலோத்துங்கனது படை இருந்தாலும், இடைவழியில் தங்கள் பெரும் கோட்டை அளத்தி நின்றிருந்தாலும், சோழர் படையின் வேகம் சாமான்யமானதல்ல என்பதையும் நேரிடையாகவே கண்டிருந்த ஜெயதுங்க னின் மனம் உறங்க மறுத்தது.

பகல் பொழுது முழுதும் வாட்டி வதைத்த வெப்பம் இரவின் குளுமையில் கரைய, நடுநிசி வரை கவலையோடு விழித் திருந்த ஜெயதுங்கனை மெல்ல மெல்ல உறக்கம் வென்றது.

இருள் மெல்லத் தன் போர்வையை விரிக்கத் தொடங்கிய சமயம். சிந்தனை வசப்பட்டு வந்து கொண்டிருந்த அரையன், "ஜெயந்தா" என்று அழைத்தான்.

"என்ன பிரபு?"

"நமது படைத்தலைவரின் பாசறை எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?"

"இன்னும் இருபது காத தூரத்திலிருக் கிறது, பிரபு!"

"இந்தப் பாதை சற்று மேற்கே திரும்பி னால் நவிலைக் கோட்டைக்குச் செல் கிறதா?"

"ஆம் பிரபு!"

"சரி வா என்னுடன். முதலில் நவிலை யின் நிலையைப் பார்க்கலாம்!"

ஜெயந்தன் திடுக்கிட்டான்.

"பிரபு நவிலையில் ஜெயதுங்கனும் அவன் படை வீரர்களும் இருக்கிறார்கள்."



## அருள்வாக்கு

பொது ஜனங்களுக்கும் ஆட்சியிலே பங்கு தருகிற ஜனநாயகம் என்பது மேல்நாட்டினர் சொல்லிக் கொடுத்துத்தான் நமக்குத் தெரியவந்ததென்று பொது அபிப்ராயம் இருக்கிறது.

ஆனால் வாஸ்தவத்திலோ வேதகாலத்திலிருந்தே ஸகல ஜனங்களின் அபிப்ராயமும் ப்ரதிபலிப்பதற்கு இடம் தந்துதான் ராஜ்ய நிர்வாஹம் நடந்து வந்திருக்கிறது. வேதத்திலே "ஸபா", "ஸமிதி", "விததா", என்று இரண்டு, மூன்று அமைப்புகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. இவற்றில் அறிஞர்களாக இருக்கப்பட்ட ஜனங்கள் கூடி ஆட்சி விஷயங்களைக் கலந்தாலோசித்து முடிவுகள் எடுத்ததாகவும் அவற்றுக்கு இணங்கவே அரசன் பரிபாலனம் செய்ததாகவும் தெரிகிறது. வெள்ளைக்கார சரித்திர ஆசிரியர்கள் கூட இவை பிராம்மணர்களால் மட்டுமோ, அல்லது பிராம்மண க்ஷத்ரியர்களால் மட்டுமோ அமைந்ததாகச் சொல்லாமல், ஸகல ஸமூஹங்களுக்கும் ப்ரதிநிதித்வம் தருகிற ரீதியில் தான் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது என்று சொல்கிறார்கள்.

'நமோ நம' என்று திரும்பத் திரும்ப வருவதாக "ருத்ரம்" என்று அபிஷேக காலத்தில் ஒரு ஸ்தோத்ரம் சொல்லப்படுகிறதே, அது வேதத்திலேயே வருவது – யஜுர் வேதத்தின் தைத்திரீய ஸம்ஹிதையில் வருவது. அதிலே இந்த லோகத்திலிருக்கப்பட்ட எல்லா சேதன, அசேதனங்களையும் சொல்லி, அவை ஒவ்வொன்றுக்கும் 'நமோ நம' என்று நமஸ்காரம் பண்ணப்படுகிறது. எதனாலென்றால் அது ஒவ்வொன்றிலும் விச்வவ்யாபியான பரமாத்மா நிறைந்திருப்பதால். எல்லாம் சிவ ஸ்வரூபம் என்று இப்படிச் சொல்லிக் கொண்டே போகிற போது, "ஸபைகளுக்கெல்லாம் நமஸ்காரம்; ஸபாபதிகளுக்கெல்லாம் நமஸ்காரம்" என்று "நமோநம" சொல்லியிருக்கிறது. ராஜாங்க கார்யங்களுக்காக ஏற்பட்ட மக்களுடைய ஸபையும், அதற்கு அக்ராஸனராக இருந்த ஸபாபதியும் தான் இங்கே குறிப்பிடப்படுவது.

ஜனங்களுக்கு நல்லது பண்ணுவதற்காகப் பல அறிஞர்கள் ஒன்றுகூடி ஒரு ஸபை ஏற்படுத்தினால் அது ஈச்வர ஸ்வரூபமே என்று மதித்து "ருத்ர"த்தில் அதற்கு நமஸ்காரம் தெரிவித்திருக்கிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

''அதனால் என்ன? நாம் கோட்டைக்குள் செல்லப் போவதில்லையே?''

''பிரபு. நாம் தனித்துச் செல்வதை விடப் பாசறைக்குச் சென்று படைத்தலைவரிடம் தெரிவிப்போம். விடிவதற்குள் நவிலையைத் தவிடுபொடியாக்கி விடுவார்'' - ஜெயந்தன் படபடத்தான்.

''ஜெயந்தா! இளவரசர் நவிலையில் சிக்கியிருப்பதை மறந்து விட்டாயா? அவர் நிலையறியாது தாக்குவது அறிவீனம் அல்லவா? முதலில் அங்குள்ள நிலையை அறிந்து கொள்வோம்'' என்றான் அரையன்.

ஜெயந்தன் புரிந்ததற்கு அடையாளமாகத் தலையாட்ட இரு புரவிகளும் நவிலைக்குச் செல்லும் பாதையில் முன்னேறின.

சற்று நேரத்திற்கெல்லாம் மரங்களினூடே கோட்டை தெரிய ஆரம்பித்தது. வேகத்தைக் குறைத்து, மரங்களின் மறைவிலேயே சென்ற இருவரும் கோட்டையைப் பக்கவாட்டில் நெருங்கினர். இரவு கவியத் தொடங்கி விட்டதால் கோட்டையில் ஏற்றப்பட்ட பந்தங்களின் ஒளியில் அதன் அமைப்பையும், சுவர் மீது உலவிய வீரர்களையும் கண்ட அரையனின் ஆராய்ச்சிக் கண்கள் கோட்டை வெகுதிடமாக இருப்பதையும் சுவர்கள் கனமாக இருப்பதையும் புரிந்து கொண்டன.

ஆனால் எந்தக் கோட்டையிலும் இல்லாத அமைப்பாகப் பின்புறத்து மதில் ஆற்றின் கரை வரை நீண்டிருப்பதைக் கவனித்த அரையனின் விழிகளில் சிந்தனை படரலாயிற்று.

புரவியை விட்டுக் கீழே இறங்கினான் அரையன். ஜெயந்தனும் பின்தொடர்ந்தான். பாதையை விட்டு விலகிக் குறுக்கில் ஆற்றின் கரையை நோக்கி நடந்தனர். கரையோரமாகவே கோட்டையை நெருங்கி, மதிலின் பின்புறத்தில் தெரிந்த ஓரிரு பந்தங்களையும், உள்ளிருந்து ஒலித்த யானைகளின் இரண்டொரு பிளிறல்களையும் கவனித்த அரையனின் முகத்தில் முறுவலொன்று படர்ந்தது.

ஜெயந்தனுக்கு ஒன்றும் புரிபடவில்லை. அரையனின் துணிவு அவனுக்கு வியப்பை அளித்தது.

மெல்ல நடந்து மதிலின் நிழலடித்த பகுதிக்கு வந்தனர். சற்று தூரத்தில் அரையன் எதிர்பார்த்தபடி மதிலின் நடுவில் பெரும் கதவுகள் நின்றன.

இருவரும் கதவை நோக்கிக் காலடி எடுத்து வைத்ததும் இருளிலிருந்து நான்கு சாளுக்கிய வீரர்கள் பந்தங்களின் வெளிச்சத்துக்கு வந்தனர். நால்வரின் விழிகளும் சோழ வீரர்களின் உடையை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்க, கைகளில் உருவப்பட்டிருந்த வாட்கள் பந்தங்களின் வெளிச்சத்தில் மின்னின.

(தொடரும்)

காஞ்சி பெரியவரிடம் குழந்தைப் பருவம் முதல் பழகும் பாக்கியம் பெற்ற வீழிநாதன் இன்று சென்னை பல்கலைக் கழகத்தின் சமஸ்கிருதப் பிரிவுப் பேராசிரியர். தமக்கு ஏற்பட்ட சில அனுபவங்களைக் கூறுகிறார்:



# "பெரியவாளுக்கு வாழ்க்கை என்ன கற்றுத் தந்தது?"

"சூரியனை நோக்கிப் பயணம் செய்யும் ஒருவனை இடைவிடாமல் நிழல் பின் தொடர்ந்து கொண்டே இருக்கும். எந்த ஒரு கணத்தில் அவன் தன் இலக்கை மறந்து திரும்பி, நிழலைத் தொடர ஆரம்பிக்கிறானோ, அப்போதே அவன் இலக்கு தவறான திசைக்கு மாறுகிறது. அவன் முயற்சி வீண் பாதையில் போகிறது. இலட்சியம் என்கிற சூரியனை நோக்கிச் செல்பவனை, பணம், பதவி, புகழ் என்ற நிழல் இயல்பாகவே பின் தொடரும். ஆனால் இலட்சியத்துக்குப் புறங்காட்டி நிழல் போன்றவற்றை அவன் நாடிச் சென்றால் அவை அவனை விட்டு விலகிப் போய்க் கொண்டேயிருக்கும்..." - ஸ்ரீ பெரியவாள் ஒரு முறை எனக்குக் கூறிய இந்த அறிவுரையைப் பிறிதொரு சமயம் அவருடன் பேசுகையில் நினைவு கூர்ந்தேன்.

"நான் அப்படிச் சொல்லலையே.....!!" என்றார்

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. பெரியவாளே மீண்டும் பேசினார்:

"இலட்சியம் என்கிற 'சூரியனை நோக்கிச் செல்பவனைப் பணம், பதவி, புகழ் முதலியன துரத்திக் கொண்டு வரும்' என்றல்லவா சொன்னேன்..." என்று திருத்தினார்.

பல வருடங்களுக்கு முன் பயன்படுத்திய அந்தச் சொற் பிரயோகத்தைக் கூட நினைவில் கொண்டிருந்த அவருடைய ஆற்றல் என்னை பிரமிக்க வைத்தது.

**1937** இல் பெரியவர் காசி யாத்திரை செய்தார். அப்போது அவரைச் சந்தித்த ராம யசஸ் த்ரிபாதி என்ற கல்வியாளர் மனமுருகினார். "காசியை விட்டு வெளியேறுவதில்லை என்ற பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறேன். தங்களைப் போல் ஒரு மகான் இப் பகுதிகளுக்கு வருவார் என்று அறிந்திருந்தால் நான் அவ்வாறு செய்து கொண்டிருக்கமாட்டேன்... தங்களுடன் யாத்திரை செல்லும் பாக்கியம் எனக்கு இல்லை...."

தமக்கே உரிய கருணையுடன் த்ரி

**பேராசிரியர் வீழிநாதன்**

# அவதார தினம்

**வை**காசி அனுஷம் என்பதை வைசாக அனுராதா எனக் கூறுவதே சரியாயிருக்கும். 'வைசாகி'தான் 'வைகாசி' எனத் திரிந்திருக்கிறது. - மதுரை என்பது மருதை ஆவது போல! அந்த வைசாக மாதமென்பது நமது சித்திரை மாத அமாவாஸ்யைக்கு மறுதினமான பிரதமையிலிருந்து அதற்கடுத்த அமாவாஸ்யை வரையிலுமான இரண்டு பக்ஷ காலமாகும். அவதார நாள்கள், பண்டிகை தினங்கள் ஆகியவற்றைச் சாந்திர மானமாகவே நிர்ணயிப்பதால் இதுதான் ஸ்ரீ 'மஹாபெரியவாளின் ஜயந்திக்கும் பொருந்தும். அதோடு அவர்கள் ஜனித்ததும் சாந்திரமானப் பஞ்சாங்கத்தை அனுஸரிக்கும் கன்னடியர் குடியிலேதான். எனவே எப்போதுமே நமது ஸ்ரீமடத்தில் சாந்திரமான வைசாக மாதத்தில்தான் அவரது ஜயந்தியைக் கொண்டாடுவது வழக்கம். அது நமது, அதாவது தமிழ் நாட்டார் பின்பற்றும் ஸௌரமானப் பஞ்சாங்கப்படியான, வைகாசி மாதமாகவும் சில சமயங்களில் அமையும். பல சமயங்களிலோ அது நமது சித்திரை மாதத்திலேயே வந்து விடும். நிகழும் ஆண்டில் கூட வைசாக அனுஷம் நம்முடைய சித்திரையிலேயே வந்து விட்டது. மே 7-ந் தேதியாகிய அன்றுதான் விமரிசையாக சதாப்தித் தொடக்க மஹோத்ஸவம். ஜூன் 4 நமது வைகாசி மாத அனுஷம். அன்று சந்திர க்ரஹணம் நேருவதால் விழா எடுப்பது அவ்வளவு சிலாக்கியமல்ல என்று ஒரு கருத்து உள்ளது. ஆனால் க்ரஹண காலத்தில் மந்த்ர ஜபத்திற்கு வீர்யம் வெகுவாகக் கூடும். எனவே மே 7-ஐ வெளிப்படை விழாவாக எடுத்து ஆனந்திக்கலாம். ஜூன் 4-ந் தேதி "ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர" என்பதை நமது ஸத்குரு பரமாத்மாவுக்குரிய மஹா மந்த்ரமாகக் கொண்டு ஜபித்து ஜபித்து உள்ளூர அவரில் ஊறி, சாந்த ஸுகம் காணலாம்.

தொண்ணூற்றொன்பது ஆண்டுகளுக்கு முன் அவர் திருவவதரித்த அந்த அனுஷ நன்னாள், 1894 மே 20 எனும் பொன்னாள் - சாந்திரமானம், ஸௌரமானம் ஆகிய இரண்டின்படியும் வைசாக - வைகாசியாக அமைந்திருந்தது. "நாடெல்லாம் ஒற்றுமைக்குள் உய்யவே" ஏற்பட்ட அத்வைத ஸ்வரூபத்தின் அவதார தினத்திலேயே இரண்டு வித கணனம் என்ற த்வைத வேற்றுமை இருக்கக் கூடாதுதானே?

- 'காமகோடி' இதழில் ரா. கணபதி



பாதிக்குச் சமாதானம் கூறினார் காஞ்சி முனிவர்:

"நான் எங்கே இருந்தாலும் உன் பக்கத்தில் இருப்பதாக நீ எண்ணிக்கொள்; நீ எங்கே இருந்தாலும் என் அருகில் இருப்பதாகவே நான் எண்ணிக் கொள்கிறேன்...."

ஆயிரம் யாத்திரைகளால் கிடைக்காத மனத்திருப்தி திரிபாதிக்கு இந்த ஒரு வாக்கியத்தில் கிடைத்தது என்று சொல்லத் தேவையில்லை.

பல வருஷங்கள் கழித்து (அறுபதுகளில்) நான் காசிக்குக் கிளம்பும் முன் ஸ்ரீ பெரியவாளிடம் உத்தரவு வாங்கிக் கொள்ளச் சென்றேன். ராம யசஸ் த்ரிபாதியை நேரில் பார்த்து க்ஷேம லாபம் விசாரித்து வரும்படி பணித்தார்.

காசிக்குச் சென்ற எனக்குப் பேரதிர்ச்சி. பெரியவாள் அவரைப் பற்றி என்னிடம் பேசிய அதே தினத்தில் த்ரிபாதி காலமாகியிருந்தார்.

யாத்திரை முடிந்து திரும்பியதும் பெரியவாளிடம் செய்தியைச் சொன்னேன். என்னிடம் அவர் த்ரிபாதியைப் பற்றிப் பேசிய அதே தினத்தில் அன்னாரின் உயிர் பிரிந்ததைச் சுட்டிக் காட்டி முப்பது வருடங்களுக்கு முன் அவர் பேசிய வார்த்தைகளை நினைவூட்டினேன். "த்ரிபாதியின் கடைசி காலத்திலும் அவருடன் இருந்திருக்கிறீர்கள்" என்றேன்.

"உன் அபிமானத்தாலே அப்படிச் சொல்றே..." என்று என் போற்றுதலை ஒதுக்கியவர் நான் விடைபெறும் நேரத்தில் சொன்னார் :

"நான் அவரை நினைச்சிண்டிருக்கேன்னு அவருக்குத் தெரிவிக்க முடியாமல் போயிடுத்து..." அந்தக் கருணை சிலிர்ப்பூட்டியது.

'**வா**ழ்க்கை என்ன கற்றுக் கொடுத்தது?' என்ற தலைப்பில் கட்டுரை எழுதும்படி ஸ்ரீ பெரியவரை ஒரு பத்திரிகை அணுகியது.

பிரதி தினம், வாழ்க்கை எனக்குப் பாடம் கற்றுக் கொடுக்கிறது. ஏற்றுக் கொள்ளும் பக்குவம் எனக்கு வந்ததா, வரவில்லையான்னுதான் தெரியவில்லை..." - பளீரென பதில் சொன்னார். எல்லோரையும் இந்த பதில் ஸ்தம்பிக்கச் செய்தது. பிற்பாடு பெரியவர் அத்தலைப்பில் கட்டுரை எழுத, அது வெளியானது என்றாலும் தன்னடக்கமே உருவாக அவர் தந்த பதில் ஆழமாகச் சிந்திக்க வைத்தது; வாழ்க்கை அவருக்கு முதலில் கற்றுத் தந்தது அந்தத் தன்னடக்கமே என்பதைப் புரிந்து கொண்டோம்.

# சக்கரவர்த்தித் திருமகன்



## 37. பரத்வாஜ ஆசிரமம்

**ப**ரதன் பரிவாரத்துடன் பரத்வாஜ ஆசிரமத்தை நோக்கிச் சென்றான். பிரயாகவனம் போய்ச் சேர்ந்ததும் சிறிது தூரத்தில் ரம்மியமான ஒரு சோலையும் அதன் மத்தியில் பர்ண சாலையும் இருக்கக் கண்டார்கள். அதுவே பரத்வாஜ ரிஷியின் ஆசிரமம் என்று அறிந்து பரதன் தன் பரிவாரக் கூட்டத்தை நிற்கச் சொல்லி விட்டு வசிஷ்டர் முதலிய சில முக்கியமான பெரியவர்களுடன் அடக்கமாகச் சென்றான். தன்னுடைய பட்டாடை, வில், அம்பு, கத்தி முதலிய க்ஷத்ரிய வேஷங்களைக் கழற்றி வைத்து விட்டு வசிஷ்ட முனிவரை முன்னிட்டுக் கொண்டு காலால் நடந்து சென்றான். பிறகு மந்திரிகளையும் ஓர் இடத்தில் நிற்கச் சொல்லி விட்டான். வசிஷ்டரை மட்டும் கூட அழைத்துச் சென்றான். வசிஷ்டரைக் கண்டதும் பரத்வாஜர் ஆசனத்திலிருந்து எழுந்து சிஷ்யர்களை ராஜகுமாரனுடைய பாதத்துக்கு ஜலம் கொண்டு வரச் சொல்லி வசிஷ்ட முனிவரை எதிர் கொண்டார்.

பரத்வாஜ முனிவரை பரதன் வணங்கினான். அவரும் இவன் யார் என்பதை அறிந்து கொண்டார். ராஜகுமாரனுக்குச் செய்ய வேண்டிய உபசாரத்தை முறைப்படி செய்வித்து க்ஷேம சமாசாரம் விசாரித்தார். ஏற்கெனவே தெரிந்த துயரமான விஷயமான படியால் தசரதனைப் பற்றிக் கேட்கவில்லை.

**நா**ன் 'சக்கரவர்த்தித் திருமகன்' எழுதுவது வால்மீகி ராமாயணத்தின் படி. குகன் எப்படி பரதனுடைய பரிவாரத்தைக் கண்டு சந்தேகித்தானோ அப்படியே பரத்வாஜ ரிஷியும் பரதனுடைய எண்ணத்தைச் சந்தேகித்துக் கேட்டதாக வால்மீகி இந்த இடத்தில் பாடியிருக்கிறார். துளசி ராமாயணத்தில் இப்படி இல்லை. துளசி ராமாயணம் முற்றிலும் பக்தி மயம். ரிஷிகளுக்குத் தெரியாத ஒரு விஷயமில்லை. ஆனபடியால் துளசி ராமாயணத்தில் பரதனைப் பற்றிப் பரத்வாஜருக்குச் சந்தேகம் எப்படியிருக்க முடியும்? ஆனால் கம்பர் பாடியிருப்பது வால்மீகி முனிவரைப் பின்பற்றியே இருக்கிறது. இந்தக் கட்டத்தில் மட்டிலுமல்ல, இன்னும் பல இடங்களிலும் நன்றாகக் காணப்படுகிறது. கம்பர் வால்மீகி-ராமாயணத்தை மிகக் கவனமாகப் பின்பற்றியே தம்முடைய தனிச் செல்வமான கற்பனா சக்தியையும் உபயோகித்து அபார அழகுடன் தம் ராமாயணத்தைப் பாடியிருக்கிறார். ஏதும் மாற்றாமலே அநேக இடங்களில் சாமர்த்தியமாகச் சிக்கல்களைச் சரிப்படுத்தி விட்டிருக்கிறார். மாற்றிப் பாடியிருப்பது வெகு சில இடங்களிலேயே.

துளசி ராமாயணம் அப்படியில்லை. ஏராளமான மாறுதல்கள் செய்திருக்கிறார். தம் சொந்த சொத்தாகவே பாவித்து துளசிதாஸர் ராமனைப் பாடியிருக்கிறார். அது அவருடைய அபார பக்தியினால் உண்டான உரிமை.

ராஜாஜி

கம்பர், பரத்வாஜ பரத சம்பாஷணையை வால்மீகி சொல்லியபடியே வைத்துக் கொண்டு ரிஷி சொன்னதைக் கேட்ட பரதன் பெரும் சினங் கொண்டு பதில் சொன்னதாக மிக அழகாகப் பாடியிருக்கிறார்.

எப்படியாயினும் பரத்வாஜ ரிஷி அப்பாவி பரதனைச் சந்தேகப்பட்டுக் கேட்டது நமக்கு 'ஒரு மாதிரியாக'த் தான் இருக்கிறது. குகன் கேட்டதில் தனியழகு பொதிந்து கிடக்கிறது. பரத்வாஜர் சந்தேகித்தது நியாயமாகத் தோன்றவில்லை. இதற்குச் சமாதானம், ''அப்பனே, உன்னை நான் அறியாதவனா? உன்னுடைய குணத்தைத் திண்ணமாக்கி, விளக்கிக் காட்டி உன்னைப் புகழ் பெறச் செய்வதற்காகவே பரீக்ஷையாகக் கேட்டேன். பரிசுத்தமான எண்ணத்தை ஊர்ஜிதப் படுத்துவதற்காகவே கேட்டேன் என்று வால்மீகி ராமாயணத்தில் ரிஷி சொன்னதாகக் காணப்படுகிறது.

நம்முடைய காலத்தில் ரிஷிகளைப் பற்றி நாம் கொண்டுள்ள சித்திரம் வேறு; வால்மீகி காலத்தில் வேறு. எப்படி ஸ்ரீராமன் சாக்ஷாத் பகவானுடைய திருவவதாரமாயினும் வால்மீகி ராமாயணத்தில் ஒரு வீர புருஷனாகச் சித்திரிக்கப்படுகிறானோ, அப்படியே பரத்வாஜ ரிஷியும் அவர் ராமனிடம் வைத்த வாத்ஸல்யத்தினால் பரதனைச் சந்தேகித்ததாகச் சொல்லப் படுகிறது. ''ராகவ ஸ்நேக பந்த''த்தால் ரிஷி இவ்வாறு கேட்டதாகவும் பிறகு பரதன் வருந்தியதைக் கண்டு சமாதானமாகச் சில மொழிகளைச் சொன்னதாகவும் வால்மீகி பாடியிருக்கிறார். வால்மீகி ராமாயணத்தில் எல்லாப் பாத்திரங்களும் அபூர்வ குணங் கொண்ட மானிடர்கள். தெய்வீகத் தன்மை இளம் சூரியனைப் போல் லேசாக வீசுகிறது. அவ்வளவே. மானிட இயல்பு அதிகம். பின்னால் வந்த துளசிதாஸர் காலத்தில் பக்தி ரசம் நடுப்பகல் போல் விளங்குகிறது. வேறு எதற்கும் இடமில்லாமல் பூரண ஒளி பெற்று விட்டது. கம்பருடைய சித்திரத்தில் பக்தி பிரதானமாகவே இருந்தாலும் வால்மீகி சித்திரத்தினுடைய மானிட வண்ணம் அழிந்து போகாமல் பக்தியைப் பின்னால் எழில் வீசும்படி வைத்து, மானிட சித்திரத்தை இன்னும் பேரழகு பெறும்படி செய்திருக்கிறார்.

**ப**ரதனைக் கண்டதும் பரத்வாஜர் க்ஷேம சமாசாரம் விசாரித்து விட்டு,

''பரதனே., நீ ஏன் ராஜ காரியத்தை விட்டு விட்டு இங்கே வந்தாய்? உன் பொறுப்பு அயோத்தியையில் அல்லவா இருக்கிறது? எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தோன்றுகிறது. இளைய மனைவியின் பேச்சைக் கேட்டுத் தசரதன் ராமனைப் பதினான்கு வருஷம் காட்டில் வசிக்கும்படி ஆணையிட்டதனால் அவன் தன் தம்பியையும் மனைவியையும் அழைத்துச் சென்று வனத்திலிருக்கிறான். உன் ராஜ்ய பரிபாலனத்துக்கு இன்னும் கொஞ்சம் இடையூறு இருக்கிறதென்று எண்ணினாயா? அதை நீக்குவதற்காக ஏதாவது இன்னும் யோசனையா?'' என்று கேட்டார்.

இந்த மொழிகள் முனிவர் வாயினின்று வர பரதன் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. பேச்சுக் குளறிப் போயிற்று.

''ஐயோ, நான் செத்தேன்!'' என்றான். ''தாங்களே என்னைச் சந்தேகித்து விட்டீர்களா? பகவானே, வேண்டாம். என்னைக் கொல்லாதீர்! என்னைப் பெற்றவள் நான் எங்கேயோ இருந்த சமயத்தில் எனக்குத் தெரியாமலும் என் சம்மதம் கொஞ்சமும் இல்லாமலும் செய்து விட்டதை என் பேரில் சுமத்தலாகாது. எப்படியாவது ராமனுக்குச் சமாதானம் சொல்லி அயோத்திக்கு அழைத்துப் போய் அவனை அரசனாக்கி அவனுக்கு நான் ஆயுள் முழுதும் அடிமையாக இருந்து சேவை செய்ய வேண்டுமென்றல்லவா வந்திருக்கிறேன்? ராமன் இருக்குமிடம் தங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அவனைப் பிரார்த்தித்து அழைத்துப் போக வந்திருக்கிறேன். என்னை இப்படிச் சொல்லாதீர்!'' என்று பரதன் அழுதான்.

அதன்மேல் பரத்வாஜர், ''பரதனே, உன் உள்ளத்தின் பான்மை எனக்குத் தெரியும். ரகு வம்சத்தில் பிறந்த நீ வேறு எப்படியிருக்க முடியும்? ராமனிடத்தில் உனக்குள்ள பக்தி எப்போதும் உறுதியாக இருந்து உன் கீர்த்தி வளர்ந்து ஓங்குவதற்காகவே நான் இவ்வாறு கேட்டேன், வருத்தப்பட வேண்டாம். சக்கரவர்த்தித் திருமகன் சித்திரகூட மலையில் இருந்து வருகிறான். இன்று இங்கே தங்கி நாளை மந்திரிகளுடன் அவ்விடம் போவாயாக. இந்த ஆசிரமத்தில் இன்று

சௌகார் ஜானகி எழுதிவரும் 'நவரச நினைவுகள்' தொடரின் 18 ஆம் பகுதி அடுத்த இதழில் இடம்பெறும்

தங்கு வதற்கு ஒப்புக் கொண்டு என்னை மகிழச் செய்வாய்!'' என்றார்.

“சுவாமி, தாங்கள் எனக்குச் செய்த அர்க்கியம், பாத்யம் இவை போதாதா? எல்லா அதிதி பூஜையும் பெற்றுப் பெரிய விருந்தும் உண்ட மாதிரி அடியேன் திருப்தியடைந்து விட்டேன்'' என்றான் பரதன்.

வனத்தில் வசிக்கும் ஏழை தவசிக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்று அரசகுமாரன் எண்ணுகிறான் என்பதை பரத்வாஜர் தெரிந்து கொண்டு புன் சிரிப்புச் சிரித்து, ''அப்படியில்லை, உன் பக்திக்கும் பதவிக்கும் தக்க உப சாரம் செய்யக் கடமைப்பட்டிருக்கி றேன்'' என்று சொல்லி, ''உன் சேனை பரிவாரம் எல்லாரும் ஏன் தூரத்தில் நின்று விட்டார்கள்? ஏன் நீ அவர்களை அழைத்து வரவில்லை?'' என்று கேட் டார்.

''பரிவாரங்களோடு ரிஷிகளுடைய ஆசிரமத்தின் அருகில் போகக் கூடாது என்கிற நியமப்படி அவ்வாறு செய் தேன். என்னுடன் வந்திருக்கும் கூட்டம் மிகப் பெரிது. அது இங்கே வந்தால் உங்களுக்குப் பெரிய இடையூறாக விருக்கும்'' என்றான் பரதன்.

''அப்படியில்லை. எல்லோரையும் வரச்சொல்லி உத்தரவிடுவாய்!'' என் றார்.

அவ்வாறே பரதனும் தன் பரிவாரத் துக்குச் சொல்லியனுப்பினான்.

பரத்வாஜர் தம் ஹோமசாலைக்குச் சென்று மூன்று தரம் மந்திரத்தோடு நீர் அருந்தி முகத்தைத் துடைத்துக் கொண்டு, ''ஏ, விசுவகர்மாவே! ஏ, மயனே!'' என்று தேவாசுர சிற்பிகளைக் கூவியழைத்தார். ''பரதனுக்கும் அவன் பரிவாரத்துக்கும் நான் விருந்து செய்ய விரும்புகிறேன். அதற்கு வேண்டியன வெல்லாம் நடைபெற வேண்டும்'' என் றார் பரத்வாஜர்.

யமன், வருணன், குபேரன், அக்னி முதலிய தேவர்களையும் வரவழைத்து, ''உங்கள் உதவியைக் கொண்டு பரத னுக்கு நான் அதிதி பூஜை செய்ய விரும் புகிறேன்'' என்றார்.

அற்புதமான நிகழ்ச்சி நிகழ்ந்தது. முன் விசுவாமித்திரருக்கு வசிஷ்டர் செய்த விருந்து போல் பரத்வாஜரின் ஆசிரம வனத்தில் நடந்தது. ஆனால் அப்போது விசுவாமித்திரர் நடத்தியது போல் பரத்வாஜர் ஆசிரமத்தில் ஒரு விவகாரமும் கலகமும் நடைபெற வில்லை. எல்லாருக்கும் தகுந்த விடுதி கள், ஸ்னானாதி விஷயங்களுக்குச் சௌகரியங்கள், சந்தனம், புஷ்பம், அன்ன பானாதிகள், பணியார வகை கள், அப்ஸரஸ்களின் நிருத்தியம், கந்தர்வ சங்கீதம் எல்லாம் நினைக்க முடியாத தெய்வீக ரீதியில் ஏற்பாடு செய்யப்பட்டு எல்லாரும் மெய்ம் மறந்து அனுபவித்தார்கள். பரத னுடைய சேனையிலுள்ள படை வீரர் கள் மகிழ்ச்சி மயக்கத்தில் 'இனி நாம் தண்டகாரண்யம் போக வேண்டிய தில்லை, அயோத்திக்கும் திரும்பப் போவதில்லை, இங்கேயே இருந்து விடுவோம்' என்று எண்ணினார்கள். பரத்வாஜருடைய விருந்து தினமும் நடக்கும் என்று எண்ணி விட்டார்கள்! கூத்தாட்டவையானது ஆட்டம் முடிந் ததும் மறைவது போல் காலையில் எல் லாம் மறைந்து போகும் என்பது அவர் களுக்குத் தெரியவில்லை.

எல்லையில்லாத சம்பத்தை அடைந்த ஒரு மகாராஜா மற்றொரு மகா ராஜாவுக்கும் அவன் பரிவாரத்துக்கும் தன் ராஜதானியில் நடத்தும் ஒரு பெரிய விருந்தைப் போல் பரத்வாஜர் வசித்த ஆசிரம வனத்தில் விடுதிகள், வாகனங் கள், பணியாட்கள் உள்பட எல்லாம் ஒரு கணத்தில் உண்டாகி, அனை வரும் எல்லை மீறி அனுபவித்து மெய்ம் மறந்து தூங்கி விட்டார்கள்.

(தொடரும்)


## அடுத்த இதழில்....

- விண்ணைச் சாடும் தனியார் விமானங்கள்!
- ரிடையராகிறார் சுஜாதா.

* ஸிம்மாஸனத்தில்,
வெள்ளிக்குடையின் கீழ்.....

# பிரவசன பெரியவாள்!

**ம**காஸ்வாமிகளுடன் அறுபது வருஷங்களுக்கு மேலாய் நல்ல பரிச்சயம். அப்போது முதலே ஸ்வாமிகளின் உபந்நியாசத்தில் திளைத்த அனுபவங்கள் நிறைய உண்டு.

அப்போதெல்லாம் ஸிம்மாஸனத்தில், வெள்ளிக் குடையின் கீழ் அமர்ந்து உபந்நியாசம் பண்ணுவார். வெகு இயல்பாக அவர் பேசத் தொடங்கும் பாணியே அலாதியானது. நேரடியாக எடுத்த எடுப்பில் விஷயத்துக்குப் போகமாட்டார்.

''இப்போ.... நாமெல்லாம் தினசரி என்ன பண்றோம்... காலங்கார்த்தாலே எழுந்திருந்து... நித்ய கர்மானுஷ்டானங்களை முடிச்சிண்டு....'' என்கிற மாதிரி ஒரு பரஸ்பர ஸம்பிப்பில் தொடங்கி பக்த கோடிகளைத் தம் வசப்படுத்திக் கொண்டு விடுவார். அப்புறம் ஒரே பிரவாகம்தான்.

மகாஸ்வாமிகள் முக்கியமாக வலியுறுத்துவது ஹிந்து தர்மம், அது வலியுறுத்தும் கடமைகள், அனுஷ்டானங்கள் இவற்றைப் பற்றித்தான். விஞ்ஞானம், சங்கீதம், கலைகள் என்று எதை எடுத்துக் கொண்டாலும் உடனே வேதங்களுக்குப் போய் விடுவார். எல்லாவற்றையும் பழமையான நம் வேத சாஸ்திரங்களுடன் தொடர்பு படுத்திப் பேசுவார்.

**ச**மீப காலங்களில் மகாஸ்வாமிகள் உபந்நியாசம் செய்வதை நிறுத்திக் கொண்டுவிட்டார். ஆனாலும் மகாஸ்வாமிகள், வருகிற பக்தர்களிடம் கேட்கிற கேள்விகள், அவர்கள் தரும் பதில்களின் அடிப்படையில் தரும் மேல் விளக்கங்கள் அவ்வளவும் உபந்நியாசம்தான்!

ஒரு சமயம் அணு விஞ்ஞானிகள் சிலர் மகாஸ்வாமிகளைத் தரிசனம் பண்ண வந்திருந்தார்கள். அன்றைய 'ஹிந்து'வில் ஒரு கட்டுரை அணுவின் ஆற்றல் பற்றி விஞ்ஞான ரீதியான விளக்கத்துடன் வந்திருந்தது. அவர்களிடம் அதை எடுத்துத் தந்து, ''இதைப் படிச்சியோ....? என்ன விஷயம்னு சொல்றியா?'' என்று கேட்டார். வந்தவர்களுக்கு ஒரே வியப்பு. 'ஒரு ஆன்மிகத் தலைவருக்கு அணு விஞ்ஞானத்தில் இவ்வளவு ஆர்வமா?' அவர்கள் கட்டுரையின் சாரத்தைக் கூறியதோடு அல்லாமல் பெரியவாளின் வினாக்களுக்கும் பதில் தர வேண்டியிருந்தது. சுவாமிகளின் கேள்விகளே அவருக்கு அந்தத் துறையில் ஏற்கெனவே உள்ள ஞானத்தையும் அதை அவர் மேலும் விருத்தி செய்து கொள்ள விரும்பியதையும் உணர்த்தின.

இப்படி பல துறைகளைச் சேர்ந்த பலரிடம் பேசி கேள்வி மேல் கேள்வி கேட்டுத் துளைத்து, விஷயங்களைக் கிரஹித்துக் கொள்வதில் சிறு குழந்தையைப் போல் அபாரமான ஆர்வம். இப்படி பெற்ற



பாலகிருஷ்ண சாஸ்திரிகள்

விஷய ஞானத்தையெல்லாம் பிரவசனங்களில் பயன்படுத்துவார்.

பதிமூன்று வயதில் பட்டத்துக்கு வந்தார். பத்தொன்பது வயதில் கும்பகோணத்தில் நடந்த ஒரு சதஸில், அந்தக் காலத்து மகாவித்வான்களெல்லாம் கூடியிருக்க, அபூர்வமான ஆற்றலோடு தலைமையேற்று நடத்தினார் என்றால் அது மகாஸ்வாமிகள் ஒருவரால் மட்டுமே ஆகும். அந்த ஆறு வருஷங்களில் கற்ற கல்வியே அவ்வளவு ஞானத்தை அடித்தளமாக்கியிருந்தது.

ஒரு சமயம் மகாப் பெரியவாள் தரிசனம். அப்போது அங்கே அவர் தவிர யாருமே இல்லாத தனிமை. ''எங்கே, வடக்கே பார்த்து நின்னுண்டு 'கிராதார்ஜுனீயம்' சொல்லு....'' என்று ஆக்ஞை. வடக்குப் பக்கம் சுவர்தான். வேறு யாருமே இல்லை. மடமடவென்று ஒரு மணிநேரம் பிரவசனம் செய்கிறேன். நடு நடுவே அர்ஜுனன் எப்போவெல்லாம் பாணப்பிரயோகம் பண்ணினான் என்கிற மாதிரி கேள்விகள். எனக்குப் புதுமையான அனுபவம்.

''உன் பிரவசனத்தை யாருமே கேட்கல்லேன்னுதானே நினைக்கிறே...'' என்று கேட்டு விட்டுக் கைதட்டி அழைக்கிறார். என் பார்வையில் படாத இடத்தில் பதினைந்து சந்நியாசிகள். அவ்வளவு பேரும் நல்ல அறிஞர்கள். ''ஆனந்தமாக் கிராதார்ஜுனீயம் கேட்டோம்'' என்று அவர்கள் சொல்கிற போது ஏற்பட்ட சிலிர்ப்பு இப்போதும் பசுமையாக இருக்கிறது. அந்த உபந்நியாசத்தின் போது திரயம்பக பலி என்று ஒரு விஷயத்தைச் சொன்னேன். '''பலி'ன்னு சொல்லாதே... ஆடு கோழின்னு நெனக்கடப் போறா.... பூஜைன்னு சொல்லு போதும்...'' என்று திருத்தியருளினார். அது ஓர் அற்புதமான குருவாரம்.. கைநிறைய விபூதியை அள்ளி என்மேல் போட்டு ஆசீர்வதித்தார்.

முஸ்லிம்களும் வருவார்கள். அவர்களிடம் திருக் குர் ஆன் சொல்லச் சொல்லி ஆனந்தமாய்க் கேட்பார். அதற்கு என்ன அர்த்தம் என்பதையும் தூண்டித் துருவிக் கேட்பார். உபந்நியாசங்களில் பைபிளிலிருந்து, மில்ட்டனிலிருந்து, எழுத்தச்சனிலிருந்து, என்று மேற் கோள்கள் நிறையக் கிடைக்கும்.

இத்தனை விஷய ஞானச் செறிவு இருந்த போதிலும் 'தமக்கு எதுவுமே தெரியாது' என்கிற அபாரமான அடக்கம் மகாஸ்வாமிகளுடையது.

சந்திப்பு : பாலன் பூங்குழலி









# பிதர்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை-20.
போன்: 412557

*திருமண வைபவங்களுக்கு:*

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

● ஆர். உமா, திருச்சி.

? 'கல்லூரி பாடத் திட்டங்களை மாற்றி அமைக்க வேண்டும்' என்கிறாரே, அரங்க நாயகம்?

! ஆஹா, பள்ளிப் பாடத் திட்டங்களை மாற்றி அமைச்சாச்சு! இனிமே கல்லூரிதான்! இப்படித்தாங்க ஒவ்வொரு ஆட்சியின் போது ஒவ்வொரு கல்வி அமைச்சர் வந்து பேசறாரு. கடைசில, அவங்கவங்க கட்சித் தலைவருங்க எழுதின, அல்லது அவர் புகழ் பாடுகிற ஒரு கட்டுரையைப் பாடத்திலே சேர்க்கறதோட சரி. இதற்கிடையிலே கல்வியாளர்கள் கூடி பேசி உருவாக்குகிற பாடத்திட்ட அறிக்கைகள் கேட்பாரற்றுக் கோட்டையிலே கரையானுக்கு இரை.

● எஸ். ஜான் ரவி, கோவில்பட்டி.

? உலகிலேயே மிகக் குறைவான அளவில் கரி இருப்பது இந்தியாவில்தானாமே?

! இருக்கும், இருக்கும்! ஒவ்வொரு தேர்தலுக்குப் பிறகும் நமது அரசியல்வாதிகள் மக்கள் முகத்தில் பூசிப் பூசியே கரியின் அளவை அடிமட்ட அளவுக்குக் குறைச்சிருப்பாங்க!

● செ. கற்குவேல், வேடப்பட்டி.

? காங்கிரஸ், தி.மு.க., அ.தி.மு.க. - எந்தக் கட்சிக்குப் பழனியில் மொட்டை போடப் படுகிறது?

! இப்போதைக்கு வாக்காளருக்கும் ஜனநாயகத்துக்கும் மழுங்கப் போட்டுட்டாங்க!

● தீபா ப்ரியா, பாளையங்கோட்டை.

? அரசு ஊழியர்கள் ஒரிசா முதல்வரைத் தாக்கியது குறித்து?

! எல்.டி.ஸி. போன்ற தரப்பட்டு வந்த சலுகைகளை இனி இல்லை என்று கைவிரித்தால் கோபம் வரவே செய்யும். தேர்தல் நோக்கில் பல சலுகைகளை அளித்து விட்டு அப்புறம் கஜானாவில் பைசா போதாமல் கையைப் பிசைவது அரசியல்வாதிகளுக்குப் பழக்கம் தான். இது ஒருபுறமிருந்தாலும் வேலை நிறுத்தத்தில் ஈடுபட விரும்பாத ஊழியர்களை அச்சுறுத்துவது; முதல்வர் மீதும் தலைமைச் செயலாளர் மீதும் வன்முறைத் தாக்குதல் நடத்துவது; கோப்புகளைக் கூளமாக்குவது எல்லாம் அடாவடிச் செயல்கள். அநாகரிக, அருவருப்பின் உச்சகட்டம். கடும் நடவடிக்கை கோரப்படுகிறது.

● தா. சிந்துகுமார், திருவட்டார்.

? சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளின் நூறாவது பிறந்த நாளையொட்டி காஞ்சிபுரத்தில் அன்னாரது கட்-அவுட்கள் வைக்கப்பட்டிருந்தது குறித்து?



✱ காத்திருக்கும்... ✱ வாடியிருக்கும்...

! இதற்கு மகாபெரியவாளைப் பொறுப்பாக்க முடியாது. இன்று அவர் பீடாதிபதியும் இல்லை; உடல் தளர்ந்து விட, எதற்கும் பொறுப்பேற்கும் நிலையிலும் இல்லை. சுற்றியிருப்பவர் செய்த தேவையற்ற ஆடம்பரம் என்பதில் சந்தேகமும் இல்லை. அரசியல் வாடை ஆன்மீகத்திலும் வீச அனுமதிப்பது அழகல்ல.

● ஆர். இருதயராஜ், திருபுவனம்.

? சந்தனக் கடத்தல் மன்னன் வீரப்பன் பேட்டி பற்றி?

! என்னத்தைச் சொல்ல, வில்லன்களை ஹீரோவாக்கும் வழக்கம் சினிமாவில் மட்டும் இருந்து வந்தது. அதுவே நிஜமும் ஆகிற போது, ஆகிறவனை விட ஆக்குபவர் மீதுதான் வருத்தம் மிகுதியாக ஏற்படுகிறது.



✱ மறுபடி வீராணம்

# புலிகளால் முதல்வருக்கு ஆபத்து வருமா?

● தென்றல் கார்த்தி, நாட்டரசன்கோட்டை.

? கடந்த ஆண்டில் தபால் தந்தி துறைக்கு ரூ 214 கோடி நஷ்டமாமே?

! கூரியர் சர்வீஸ் நடத்துவோருக்கு எவ்வளவு லாபம் என்று விசாரித்துப் பாருங்களேன்!

● சி. சீனிவாசன், திருத்துறைப்பூண்டி.

? அர்ஜுன் சிங் - தேவிலால்; ஒப்பிடுக?

! இவர் காத்திருக்கும் கழுகு; அவர் வாடி இருக்கும் கொக்கு!

● எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

? புலிகளால் முதல்வருக்கு ஆபத்து வருமா?

! முதல்வருக்கு ஆபத்து வருமோ இல்லையோ, மக்களுக்கு ஆபத்து பெருகி வருகிறது. மாமண்டூரில் தடா கைதிகளான புலிகள் தப்பியது தவிர, அகதிகள் முகாம்களில் காவலிலிருந்த ஒன்பது பயங்கரவாதிகள் இதுவரை மூன்று சம்பவங்களில் தப்பியுள்ளனர். அ.தி.மு.க. அரசின் அலட்சியமே காரணம் என்றல்லாது வேறு எப்படி இதை வர்ணிக்க முடியும்?

● அ.மா. பழனிச்சாமி, கோவை.

? தொட்டில் குழந்தைகள் சாவு அதிகமாகிக் கொண்டே வருகிறதே?

! அமைச்சர் இந்திரகுமாரி ஏதோ சால்ஜாப்பு சொல்கிறார்... ஒன்றும் திருப்தி அளிப்பதாக இல்லை. ஹிந்து நாளிதழில் ஒரு கடிதம் : பெண் சிசுக்கள் கொலை செய்யப்படுகிற அந்த வட்டாரத்தில் ஒரு பெண் பிறந்ததுமே அந்தக் குழந்தை பெயரில் ரூ 6000 அரசு கட்டி விடட்டும். 20 வயதில் அதை அப் பெண் பெற்றுக் கொள்ளலாம். லட்ச ரூபாயாக வட்டி குட்டி போட்டிருக்கும். ஒரே நிபந்தனை : தாய் கு.க. செய்து கொள்ள வேண்டும். இந்த யோசனைக்கு ஆகும் செலவு, இப்போது ஒரு குழந்தைக்கு மாதம் ரூ 1000 ஒதுக்குவதை விட அதிகமாகாது. பெற்றோரே லட்சம் கருதி பெண் குழந்தையைக் கண்ணும் கருத்துமாக வளர்ப்பார்கள். சிசுஹத்தி தவிர்க்கப்படும்.

● அ. முஸ்தபா, தக்கோலம். ❑

? சென்னை நகரில் எப்போது குடிநீர் பிரச்னை தீரும்?

! ம்... யோசிக்கலாமா? தெலுங்கு கங்கா என். டி. ஆர். வாக்களிக்க, அடுத்து வந்தவர்கள் 'பேக்' அடிக்க, ஏகப்பட்ட வரிப் பணத்தை 'ஏவ்'விட்டு இன்னும் கேட்கிறது. வீராணம் ஏற்கெனவே ஊழலுக்குப் பிரசித்தி. கான்கிரீட் பைப் அழுத்தம் தாங்காமல் 'லீக்'. பல கோடி வரிப்பணம் பாழ். மேலும் கொள்ளிடத்தில் நீர் வந்தால்தான் வீராணத்தில் நிரம்புமாம். காவிரிப் பிரச்னைதான் ஜவ்வாக இழுக்கிறதே! 'காரிய சாத்தியமில்லை' என்று எம்.ஜி.ஆர். கைவிட்டதை, உலகளாவிய டெண்டர் கோரி, நவீன டெக்னாலஜி கையாண்டு நிறைவேற்றுவேன் என்கிறார் ஜெ. செலவு விண் அளாவ, லாபம் ஸ்விஸ் வங்கிக்கு! 'கடல் நீரைக் குடிநீராக்கலாம்' என்கிறார் வாழப்பாடி. அதுவும் பயங்கர செலவு வைக்க, வரி செலுத்தும் நாம் வதைபடுவோம். நெய்வேலியிலிருந்து லாரியிலும் ரயிலிலும் நீர் வருவது, கண்டைக்காய் கால் பணம் சுமை கூலி முக்கால் பணம். சென்னையைச் சுற்றி நிறைய ஏரிகள் உள்ளன. மராமத்து செய்து, கொள்ளளவு கூட்டி, மழைக் காலத்தில் நீர் நிரம்ப வழி வகுத்து, ஆங்காங்கே சிறிய தண்ணீர் சுத்திகரிப்பு நிலையங்கள் நிறுவி, அந்த அந்த வட்டாரத்துக்குத் தண்ணீர் சப்ளை - காரிய சாத்தியம்; செலவும் கம்மி. ஆனால் நடப்பது என்ன? ஏரிகளையெல்லாம் தூர்த்து, வீடுகள் கட்டி விட்டார்கள்; கட்டி வருகிறார்கள். லேட்டஸ்ட்டாக சிட்லபாக்கம் ஏரியை முழுங்கப் பார்க்கிறது வீட்டு வசதி வாரியம். ஏன், வீராணம் திட்டத்துக்கு உலகளாவிய டெண்டர் விடுவதற்குப் பதில், எளிய, செலவு குறைந்த யோசனைக்குத் தமிழக அரசு டெண்டர் விடட்டுமே? ஏற்கப்படும் யோசனைக்குப் பரிசு அறிவிக்கலாமே!





* பேட்டி பற்றி...





❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
அ. முஸ்தபா,
14/3, ராஜம்பேட்டை தெரு,
தக்கோலம் - 631 151

## வட்டமேஜை

◆ இன்று (07.05.93) காஞ்சீபுரம் சென்று பெரியவாளைப் பார்க்கும் பாக்கியம் பெற்றவர்களில் நானும் ஒருவன். காலை 10 மணி முதல் 10-15 மணி வரை அவர்கள் கொடுத்த தரிசனத்தில் ஒரு காண முடியாத காட்சியைக் கண்டோம். சாதாரணமாக அவர்கள் ஆசி கூறுவது போல்தான் கையைக் காட்டுவார்கள். இன்றோ அந்த 'நடமாடும் தெய்வமே' பக்தகோடிகளைப் பார்த்துக் கைகளை உயரே தூக்கிக் கூப்பியது. மனமெல்லாம் மகிழ்ச்சியுடன், மனநிறைவோடும், பெறாத பேறு பெற்ற உவகையோடும் தரிசனம் செய்ததை எழுதுகிறேன்.

சென்னை - 91, ஜி. ஸ்ரீனிவாசன்.

◆ நலநிதிகள் பெறும் டெபாஸிட்கள் குறித்தும் அதற்குத் தரப்படும் உயர்ந்த வட்டி குறித்தும் தனது கருத்தை ரிஸர்வ் வங்கி வெளியிட வேண்டும் என்பது தேவை. அப்போதுதானதும் முறையானதும் கூட. அப்போதுதான் டெபாஸிட்தாரர்களுக்கும் தங்கள் பணம் பத்திரமாக உள்ளது என்ற உணர்வு ஏற்படும். வி. கோபாலன் நலநிதிகள் மூலம் காணாமல் போயிருந்த வெளிவந்தது குறித்து மகிழ்ச்சி.

திருத்துறைப்பூண்டி, ப. ரவிக்குமார்.

◆ ககன்யாவின் போட்டியை விட அவர் கைப்பட வரைந்திருந்த சிறு ஓவியமும் 'பெண்ணின் இரு முகங்களுள் ஒன்றுதான் வெளியே தெரியும். இன்னொரு பக்கம் அவளுக்கு மட்டுமே தெரிந்த ஒன்று' என அவர் விளக்கியிருந்ததும் பொருத்தமாக அமைந்திருந்தது.

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

◆ கமர்ஷியல் பட நடிகை, ஆர்ட் பிலிமில் நடிக்க விரும்புவது ஒரு புதிய மாற்றந்தான்! திருமதி பழனிச்சாமியில் வந்த பாட்டு சீனை ஆபாசம் என்று ஒப்புக் கொண்டு அதுதான் 'ஃபர்ஸ்ட் அண்ட் லாஸ்ட்' என்று உறுதி கூறிய ககன்யாவுக்குப் பாராட்டுக்கள்!

சேலம் - 6, அரசி சண்முகசுந்தரவடிவேலு.

◆ நல்லவேளை போங்கள்! ககன்யா ஆர்ட் பிலிமில்தான் நடிக்கணும்னு ஆசைப்பட்டாரே தவிர ஆஸ்கார் அவார்டு வாங்கணும்னு ஆசைப்படவில்லையே!

தேவகாந்தன் எழுதிய "நாகரிகம்" சிறுகதை பாதிக்கப்பட்டவரின் மன உளைச்சல்களை, உடைந்த உணர்வுகளை - எழுத்தின் வீச்சு மூலம் வெளிப்படுத்தி, எங்களையும் சற்று நேரம் "அதே நிலைக்கு" ஆளாக்கி விட்டது.

கம்பம், ஏ. முருகன்.

◆ கல்கியின் தலையங்கம் போலவே, 'கலைஞன்' விமர்சனமும் நச்சென்று. அதே சமயம் 'கவிதைத்தனமாகவும் இருந்தது... பாராட்ட வேண்டிய அம்சம்.

கச்சிராயபாளையம், ஆர். சி. மதிராஜ்.

◆ கல்கி 9.5.93 இதழுக்கு 'ஆச்சரிய ஸ்பெஷல்' எனப் பெயர் வைத்திருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும் - டீ.வி. பார்க்காத குடும்பம், ஒரு அவுன்ஸ் சிலந்தி விஷம் எட்டு கோடி ரூபாய், திருமாவின் தன்னம்பிக்கைத் துடிப்பு, டாக்டர் சாரதாவின் உறுதி..., கொளுத்தும் கோடையிலும் உற்சாகமாக இருந்தது. அதே சமயத்தில் வெறி நாய்க்கடி மருந்துகளுக்கு நம் அரசு விதிக்கும் வரியை நினைத்து மனம் புழுங்கியது.

மருங்கூர், பாலு. கிருஷ்ணமூர்த்தி.

◆ எஸ். ஆர். பி. - வாழப்பாடி இணைந்து அளித்துள்ள பேட்டியில் காங்கிரஸ் தனித்து இயங்க வேண்டுமென்ற காலங்கடந்த ஞானோதயம் வெளிப்பட்டது. இப்போதைய முடிவு குறித்து உறுதியாக இருந்தால் காங்கிரஸுக்கு மட்டுமல்ல, தமிழகத்திற்கும் நல்லது.

திருவாரூர், அ. சம்பத்.

◆ 'அன்றைக்கு ஒரேயடியாக அ.தி.மு.கவை ஆதரித்து. இன்று ஒரேயடியாக எதிர்க்க உண்மையான காரணம் என்ன?' என்ற கேள்விக்கு. 'அரசியல் உத்தி' என்று பதிலளித்திருக்கிறார் வாழப்பாடியார். நம் அரசியல்வாதிகளுக்கு அருமையான வார்த்தையை கற்றுக் கொடுத்திருக்கிறார். 'சந்தர்ப்பவாத அரசியல்' என்பதற்கு இப்படி ஓர் அழகான மறுபெயரா?!

தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

◆ தலையங்கம் பளீரெனக் கன்னத்தில் அறைந்தாற்போல எழுதப்பட்டிருந்தது. 'விமான விபத்தும் தேசிய ஆபத்தும்' என்கின்ற தலைப்பு மகாப் பொருத்தம்! "பணத்தாசை பிடித்து மனச்சாட்சியை விற்கும்" என்று நீங்கள் குறிப்பிட்ட தேசிய நோய், அரசியல்வாதிகளால்தான் நாடெங்கும் பரப்பப்பட்டு வருகிறது. ஆளுமிடத்தில் தோன்றுகின்ற நோய், அதிகாரிகள் மட்டத்திற்குப் பரவி, அப்புறம் அரசு ஊழியர்களிடம் பரவி, இறுதியாக மக்களிடமும் பரவி, மொத்தத்தில் எல்லாத்தரப்பிலும் நாசம் விளைவிக்கிறது. "வெள்ளையனே, வெளியேறு" என்று போராடிய எழுச்சிமிக்க மக்களின் வாரிசுகளாகிய நாம், "கொள்ளையர்களே, வெளியேறுங்கள்" என இனி போராட வேண்டிய காலகட்டம் வந்து விட்டது! மக்கள் நலனை முன்நிறுத்தி நல்ல உள்ளம் கொண்டவர்கள் ஒன்று சேர்ந்து செயல்பட்டாலொழிய நாட்டிற்கு நல்ல கதி இல்லை!

அந்தியூர், மு. தவசியப்பன்.

**ஒன்று சேருவோம், போராடுவோம்!**





# தெய்வ பலம்

''பரமாச்சாரியார் நடந்து சென்றால் நாம் கூட ஓட வேண்டி இருக்கும். அவ்வளவு வேகமான நடை! சுமார் நான்கு வருடங்களுக்கு முன் அவர் காமாட்சி அம்மன் கோயிலுக்கு நடந்து செல்லும் போது உடன் செல்லும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அந்த முதிய வயதிலும், அவர் நடையுடன் என்னால் ஈடு கொடுக்க முடியவில்லை என்றால், பரமாச்சாரியாரின் மனோபலத்தையும் தேகபலத்தையும் பற்றிப் புரிந்து கொள்ளலாம்'' என்றார் அவரைக் கவனித்து வரும் மருத்துவர். பாரத தேசம் முழுதும் நடந்தே சென்று புனிதப் படுத்தியிருக்கும் பெரியவரின் உடல் வைரமேறியது.

''ஆசார, அனுஷ்டான உணவு, விரத விஷயங்களில் மிகவும் கண்டிப்பாக இருப்பதால்தான் நூறாண்டு கண்டும் பரமாச்சாரியாரின் உடல் நிலை வஜ்ஜிரமாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. உதாரணமாக மௌன விரதம் என்றால் கண்டிப்பாக மௌன விரதம்தான். எவ்வளவு பெரிய வி.ஐ.பி. வந்தாலும் சைகைதான். காஷ்ட மௌனம் என்றால் அதுவும் கிடையாது. எழுதிக் காட்டவும் கூடாது.

''காலை மூன்றரை அல்லது நான்கு மணிக்கு எழுந்தவுடன் ஆசமனம் செய்யும் போது அருந்தும் உள்ளங்கை நீருடன் சரி. பின்னர் மதியம் மூன்று மணிவாக்கில்தான் கொஞ்சம் நெல் பொரி, பழம், பால் சாப்பிடுவார். சில சமயம், பாலுக்குப் பதில் மோர் இருக்கும். இரவு பாலும் பழமும் தான்.

''சமீப காலங்களாகத்தான் முதுமைத் தளர்வை உத்தேசித்து, டாக்டர்கள் டயட் லிஸ்டில் கேழ்வரகு சேர்த்துள்ளார்கள். அதையும் வற்புறுத்தித் தான் தர வேண்டியுள்ளது.''

கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளாகத் தம்மைக் கவனித்து வந்த காஞ்சீபுரம் டாக்டர் இருக்க, சென்னை டாக்டர் ஒருவர் பெரியவாளின் உடல்நிலையைச் சோதனை செய்ய வந்தார். அவரைப் பார்த்துப் பரமாச்சாரியார், ''நீ அவர் (காஞ்சிபுரம் டாக்டர்) கிட்டே பர்மிஷன் வாங்கிட்டியா. அவர் கூட பேசினியா?'' என்று கேட்டார்.

தொழில் தர்மத்தை எடுத்துக்காட்டிய பரமாச்சாரியாரைக் கைகூப்பி வணங்கி, 'நான் அவரைப் பார்த்து விடுகிறேன்' என்று விடைபெற்றுக் கொண்டார் அந்த டாக்டர்.

''தொழில் தர்மம் மட்டுமல்ல. புதிய டாக்டர் ஒருவர் உடலைப் பரிசோதனை செய்யத் தொடங்கும் போது, சம்பந்தப்பட்டவரின் உடலைப் பற்றிய பழைய விஷயங்களும் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதே சரியான அணுகுமுறை. அதைத்தான் அவர் தெளிவுபடுத்தினார்'' என்கிறார் அந்த மருத்துவர்.

சமீபத்தில் ஒருமுறை பரமாச்சாரியாருக்கு 105 டிகிரி ஜுரம் அடித்தது. இரவும் மருத்துவர் உடனிருந்தார். காலை ஐந்து மணிக்கு எழுந்த மருத்துவர் பரமாச்சாரியாரை அவர் படுத்திருந்த இடத்தில் காணாது திடுக்கிட்டார். வெளியே பார்த்தால், பரமாச்சாரியார் குளித்து விட்டு ஜபம் செய்து கொண்டிருந்தார்.

– தில்லப்பா

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, எக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

பாம்பே டையிங்

# முன்னணியில் என்றென்றும்

**பாம்பே டையிங்
பாலியெஸ்டர் கலந்த
பள்ளிச்சீருடை ரகங்கள்**




ஆண்டு முழுவதும் முன்னணியில்....
பள்ளிச் சீருடைகளிலும்!

- எளிதாக துவைத்து அணிய ஏற்றவை.
- துவைக்க துவைக்க மாறாத பொலிவு.
- தங்களின் தேவைக்கேற்ற நிறம்.
- கசங்கியோ, மடங்கியோ போகாது.
- நிறம் மங்காது.

உயர்ந்த தரம்
உகந்த விலை

பாலியெஸ்டர் காட்டன் சர்ட்டிங் துணி வகை,
பாலியெஸ்டர் காட்டன் சூட்டிங் துணி வகை,
காட்டன் சர்ட்டிங்குகள், காட்டன் சூட்டிங்குகள்,
ஸ்கூல் பேகுகள், சாக்ககள், டைகள்.

விநியோகஸ்தர்கள்
சிவ்ராம்ஸ் அஸோசியேட்ஸ்
கோவை 11 · சென்னை - 17.
Bankers: The Federal Bank Ltd.




பள்ளிச் சீருடைகள் வாங்கும்பொழுது
தள்ளுபடி கூப்பனை
பயன்படுத்துங்கள், இச்சலுகை
தமிழ்நாடு பாண்டிச்சேரி மற்றும்
கேரளாவில் மட்டும்தான்.

# பாம்பே டையிங்

ஸ்தாபிதம் 1879

